# மனிதனது
# உண்மை ஸ்வரூபம்

இஃது
ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள் அருளியுள்ள
அதி அற்புத வேதாந்த
உபந்நியாசங்களி லொன்று.

**வேலூர் S. நாராயண ரெட்டியார்**
மொழி பெயர்த்தது.

முதற் பதிப்பு.

சென்னை:
**தாம்ஸன் அண்டு கம்பெனி**
**மினெர்வா அச்சுக்கூடத்தில்**
பதிப்பிக்கப்பட்டது.

**1919.**

 [விலை அணா. 0-6-0.



**SWAMI VIVEKANANDA.**

அமெரிக்காகண்டத்திய சிகாகோ ஸர்வமத மகாசபையில்
ஹிந்துமத பிரதிநிதியாக விஜயம்செய்து வேதாந்தமத வெற்றியை
முழங்கச்செய்த அவதாரமூர்த்தியாகிய

**ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள்.**

உ

ஓம் ஸ்ரீரமண பரப் பிரஹ்மணே நம:

*என்னை யெனக்களித்தோ னென்னுதா ரத்தலைவன்*
*றன்னைமற வாவரமே தந்தகுரு - வென்னுயிர்*
*நாதனுஞ் சோணகிரி நண்ணுமுனி வன்ரமணன்*
*பாதப்போ துள்ளில்வைப் பாம்.*

மனிதர்களுடைய யதார்த்த சொரூபத்தை உள்ளங்கை நெல்லிக்கனிபோல எடுத்துக் காட்டவல்ல இந்த ஸ்ரீ விவேகாநந்தருடைய ஆங்கிலேய உபந்நியாசத்தை யாருடைய கிருபாகடாக்ஷத்தி னுதவியால் மொழிபெயர்த்து அச்சிட்டு வெளிப்படுத் தினேனோ, அந்த என்குருதேவர் திருவண்ணாமலை பிராஹ்மண சுவாமிகளென்கிற ஸ்ரீரமண மஹர்ஷி அவர்களுடைய திருத்தாட் கமலங்களுக்கே இப்புத்தகத்தை பக்தியுடன் சமர்ப்பித்துள்ளேன்.

S. நாராயண ரெட்டி.

உ

ஓம் ஸ்ரீரமண குரு பரமாத்மனே நம:

## முகவுரை.

### வேதாந்த மென்பது ஆத்மவித்தை. பிரஹ்ம வித்தை அல்லது தெய்வஞான மென்றும் சொல்லப்படும்.

எது பரிசுத்த பரிபூரண ஒப்பு உவமை யற்ற பரமாத்மாவாகிய கடவுளாகவும், சருவ உயிர்களுடைய உள்ளங்களிலும் ஜீவான்மாவாகவும் இருக்கிறதோ; எதை அறிந்தால் மனிதன் சருவபந்த துக்கங்களினின்றும், ஜனன மரணபயங்களினின்றும் விடுபடுகிறுனே அது ஆத்மா. இதஊ அறிவிக்கும் வித்தை ஆத்மவித்தை.

இவ்வாத்மாவை முதல் முதல் அறிந் தனுபவித்து அதன் மயமாக நின்று உலகோருக்கு அதனது இருப்பையும், அதனது சுவபாவத்தையும், அதஊ அடையும் வழியையும் தெரியச்செய்தவர்கள் புண்ணிய பூமியாகிய பரத கண்டத்தி லவதரித்த மஹாத்மாக்களான மஹர்ஷிகள்.

ஆன்மசுவரூப பரம புருஷர்களான இவர்களது தேக மன வாக்காதி செயல்க ளெல்லாம் ஆத்மார்த்த தெய்வீக மகிமைகளேயே பிரகாசிக்கச் செய்கின்றன. ஸ்ரீ ராமகிருஷ்ணபரமஹம்ஸ தேவரது சிஷ்யராகிய ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள் இத்தகைய மஹாத்துமாக்களி லொருவரென்று எல்லோருமறிந்த விஷயமேயாகும்.

இவர், அமெரிக்கா கண்டத்து சிகாகோ சருவ மதமகா சபைக்கு நம்முடைய ஹிந்துமதப் பிரதிநிதியாகச் சென்று அன்று அச்சபையில் மற்றெல்லா மதஸ்தர் களது முன்னிஉலயில் பூரண ஜய சீலராக விளங்கினதின்பேரில், அமெரிக்கர்களது விருப்பத்திற் கிசைந்தவராகி சில வருஷகாலம் அந்நாட்டிலேயே இருந்து அவர்கஊ ஆத்மஞானிகளாக்கவல்ல வேதவேதாந்த உபந்நியாசங்களேச் செய்தது மல்லாமல் அநேக மடங்கள் கோவில்களேயும் ஸ்தாபித்து வருகையில் ஐரோப்பாகண்ட வாசிக ளும் ஐரோப்பாவின் பல இடங்களுக்கும் சுவாமிகஊ அழைத்துச் சென்ருர்கள்.

ஸ்ரீ சுவாமிகள் சென்ற இடங்களி லெல்லாம் ஆத்ம தேவனது மகிமைகளேயும், ஆரியாவர்த்தத்தியவும் அதன் குடிகளான ஆரியர்களுடையவும் பெருமைகஊ அந் நாட்டார்களது ஆத்மரக்ஷணர்த்தத்தின் பொருட்டு பிரசங்கித்து பரவச்செய்யலானுர்.

ஸ்ரீ சுவாமிகள் லண்டன் மாநகரத்தில் நம்முடைய ராஜகுமாரர்கள் மத்தியில் இருக்க நேர்ந்தபோது ஆத்மார்த்தமான சில உபந்நியாசங்களேச் செய்திருக்கிறுர். அவற்றுள் "மனிதனது உண்மை சுவரூபம்" என்றழைக்கப்படுவதோர் மேன்மை பொருந்திய உபந்நியாசம். இதற்கு மற்றேரிடத்தில் "யதார்த்தமனிதனும் சாயா மனிதனும்" என்று பெயரிட்டுள்ளது. இப்பிரசங்கத்தை ஆங்கிலேயர்கள் மத்தியில்

# மனிதனது உண்மை ஸ்வரூபம்

ஆங்கிலேய பாஷையில் சுவாமிகள் செய்துள்ளாராகையால் தமிழ் தேசத்தவர்களுக்கு பயனுகுமென்று நினைத்து தமிழ்ப்படுத்தி அச்சிடலானேம்.

இப்புஸ்தகத்தின் முடிவில் ஆன்ம நிஷ்டர்களால் பாராயணம் செய்யத்தக்க உபநிடத வசனங்களும் சேர்க்கப்பட்டுள்ளன. இதனை வாசிக்க நேரும் அன்பர்கள் அவரவர்களுக்குள்ள ஜீவகாருண்யம், பரோபகாரம், தயை, தருமம், தானம், சாந்தம் மேன்மேலும் அபிவிருத்தி அடைந்து பூரணமாகி பரிபூரண பரிசுத்த பரமாத்மாவின் கண் இரண்டறக் கலந்து எப்போதும் சுக சுவரூபர்களாகப் பிழைத்திருக்க பிரார்த்திக்கும் அடியேன்.

S. நாராயண ரெட்டி.

ஓம் ஸ்ரீரமண குரு பரமாத்மனே நம:

# மனிதனது உண்மை ஸ்வரூபம்

மனிதன் விஷயேந்திரியங்களிடத்தில் அதிக பற்றுள்வனுக இருக்கிறுன். அவன் இவ்விந்திரிய வஸ்துக்களே எவ்வளவுதான் கெட்டியாகப் பற்றிக்கொண்டி ருந்தாலும், தான் ஆடிப்பாடி ஜீவித்துவரும் இப்பாஹிய (வெளி) ப் பிரபஞ்சத்தை எவ்வளவுதான் ஸ்திரமானதென்று அவன் நினைத்தாலும் அவனவனுடைய வாழ் நாட்களிலும் பல பேர்கள் சேர்ந்துள்ளதோர் ஜாதியாரின் ஜீவியகாலத்திலும் கூட ஒவ்வோர் சமயம் வருகிறது. அப்போதவர்கள் சுயேச்சையாகவே இவ்வையகக் காட்சிகள் யாவும் உண்மை யானவைகளா? சத்தியமானவைகள் தானு? என்கிற கேள்விகளைக் கேட்கிறுர்கள்.

ஒருவன் தன்னுடைய இந்திரியங்களிடத்தில் நம்பிக்கையுள்ளவனுய் வேறு சிந்தனை இல்லாமல் சதா விஷய போகத்திலேயே சொக்கியிருந்தபோதிலும், மரணத்தைக் கண்டு பலவந்தமாகத்தானே இவைகளெல்லாம் சத்தியமானவைகள் தானு? அல்லது இவைகளின் இயல்பு எத்தன்மையது என்று சிந்திக்க ஆரம்பிக்கிறுன். மதசாஸ்திரமானது இத்தகைய கேள்விகளைக் கேட்பதில் ஆரம்பித்து இவைகளுக் கேற்ற சமாதானங்களுடன் முடிவாகிறது. நமக்கு கிடைக்கக்கூடிய தகவல்களைக் கொண்டு கணக்கிட முடியாத அவ்வளவு பழைய காலத்திற்கு முன்னும், ரஹசியார் த்தங்கள் நிறைந்த புராண இதிஹாசங்களேற்பட்ட காலத்தும், பிறகு பலவித சீர்திரு த்தங்களால் நாகரீகமாக வாழ்ந்தபோதும் இப்பிரபஞ்சப் பொருள்களெல்லாம் என்ன வாய்ப்போகின்றன? வாஸ்தவமானது எது? என்கிற இவ்வித ஆராய்ச்சியே செய்யப் பட்டுள்ளது.

ஒருவன் செத்தால் அவன் அத்தோடே ஒழிந்தவன் தான் என்று ஓர் வகுப்பி னர் சொல்லுகிறுர்கள். மற்றேர் வகுப்பினர் அவன் சாகவில்லை; அவன் எப்போது மிருக்கிறுன் என்று வற்புறுத்திப் பேசுகிறுர்கள். இவ்வித விவாத வார்த்தைகளில் எது உண்மையானதென்று அத்தியந்த காவிய நடையை அனுசரித் தெழுதியுள்ள கடோப நிஷத்து விசாரிக்கிறது. இவைகளுக்கு அநேக சமாதானங்களேற்பட்டுள்ளன். மனேசாஸ்திரம், மதகிரந்தங்கள் உண்மையாகவே இவ்வித கேள்விகளுக்கு வேண்டிய வெவ் வேறுன பலவித சமாதானங்களால் நிறைந்துள்ளன. இவ்வித சந்தேக சமாதானங்கள் நடைபெறுங் காலத்திலேயே இவைகள் எழாமல் தடுக்கவும், மனிதன் செத்தபிறகு எப்படி இருக்கிறுன்? எது உண்மை? என்பவைகளைத் தெரிந்து கொள்ள விரும்பும் மனக்காதலை அடக்க யத்தனங்களும் செய்திருக்கிறுர்கள். மரணமென்பது எதுவரையில் இருக்குமோ அதுவரையில் இவ்வித மனக்காதலை அடக்க முயல்வது வீணுன காரியம்.

இந்திரியங்களுக்கு கோசரமாகும் விஷய பாஹ்ய பிரபஞ்சத்திற் கப்பால் நாம் ஒன்றையும் பார்க்க முடியவில்லை என்று பேசுகிறேம். நம்முடைய விருப்பத்தையும் நாட்டத்தையும் தற்கால வஸ்துக்களிலேயே வைத்து இவ்விந்திரிய உலகத்திற்

கப்பாலொன்றையும் சிந்திக்காதிருக்க மனதை அடக்க கஷ்டப்படுகிறோம். அதோடு கூட வெளி பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொரு வஸ்துவும் அதனதன் அல்ப எல்லைக் குள்ளாகவே அடங்கியிருக்க நம்மை இழுத்துப் பிடிக்கின்றன. தற்காலத்திய வைகளைத் தாண்டி அப்பாற்போவதினின்றும் நம்மைத் தடுக்க உலகமெல்லாம் திரண்டுவந்தாலும் மரணமென்பது நடமாடிக்கொண்டிருக்கிறவரையில் உண்மைப் பொருள்களைக் காட்டிலும் அத்தியந்த உண்மைப் பொருளாக நாம் நினைத்து பற்றி இருக்கும் இப்பிரபஞ்சமானது மரணத்தோடு போய்விடுகிறதா? அல்லது இருக்கிற தா? என்கிற கேள்விகள் மாத்திரம் அடிக்கடி மேலுக்குமேல் கிளம்பிக்கொண்டே யிருக்கும்.

உலகம் க்ஷண நேரத்தில் மறைந்து காணுமல் போகி றது. ஓர் உயர்ந்த மலை உச்சியின் ஓரத்தில் ஒருவன் நிற்கிறுன். அவனுக்கு மேல் விரிந்த அகண்ட வெளி தானுள்ளது. அவன் எப்பேர்ப் பட்டவனுனுலும், எவ்வித கடின சித்தமுடையவனுனு லும் சற்று பின்வாங்கி நின்று இவ்வையமும் அதன் வாழ்வும் உண்மையானதா? அல்லவா என்ற கேள்வியைக் கேளாமலிரான். அதிக மனோபலமுள்ள ஒருவன் தன் ஜீவியகாலத்தில் தான் நினைத்தவைகளை எல்லாம் தன் முழு சக்தியையும் வினி யோகித்து கொஞ்சம் கொஞ்சமாக செய்து முடிக்கிறுன். அவைகளெல்லாம் ஓர் க்ஷண நேரத்தில் அழிக்கப் படுகின்றனவே! இவ்வித வாழ்க்கை உண்மையா யிருக்கு மா? இச்சங்கைக்கு சமாதானம் கொடுத்தே தீரவேண்டும். காலம் செல்லச்செல்ல அதன் சக்தி குறையவில்லை. ஆனுல் இவ்விதகேள்விகள் அதிகரித்துக் கொண்டே வருகின்றன.

பிறகு சுகமாக இருக்கவேண்டு மென்கிற ஆசையும் நம்மிலிருந்து வருகிறது. நம்முடைய சுகத்திற்காக ஒவ்வொன்றின் பின் ஓடுகிறோம். இந்திரிய சம்பந்தமான இவ்வெளி பிரபஞ்சத்தில் இன்பத்தைக்கோரி காற்றுய் பறக்கிறோம். பிடித்தபிடியை சாதிக்கவல்ல ஓர் சிறுவனைக்கேட்டால் அவன் தன் வாழ்வை சத்தியத்தினும் சத்திய மான தென்று சொல்லுவான். உண்மையில் அவன் அப்படியே நினைத்திருக்கிறுன். அவனே கிழவனுனபோது அவனுடைய செல்வம் அவனைவிட்டு மெல்ல மெல்ல நழுவிக் கொண்டிருக்கையில் இது என் தலைவிதி என் கர்மம் என்கிறுன். தன்னிஷ் டப்படி தன்னுடைய கோரிக்கைகளை நிறைவேற்றிக் கொள்ள முடிய வில்லை என்று முடிவாக தெரிந்துகொள்கிறுன். அவன் எங்கெங்கே போனுலும் அங்கங்கே தன்னுல் தாண்ட முடியாத வஜ்ஜிரத்தினும் வலிய தடைகள் ஏற்படுகின்றன. இந்திரிய விஷய சம்பந்தத்தாலுண்டான ஒவ்வோர் சலனம், அல்லது அசைவு பின்னுமோர் சலனம் அல்லது கிரியையை உண்டாக்குகின்றது. எல்லாம் நிலையற்றவைகளாயிருக்கின் றன. இன்பமும் துன்பமும் விலையுயர்ந்த தீம்பண்டங்களும் ஆடை ஆபரணங்களும் செல்வமும் அதிகாரமும் ஏழ்மைத்தனமும் நம்முடைய பிராணனும் கூட எல்லாம் நிலையில்லாதவைகளே.

மனிதர்களில் இருவித தீர்மானங்களுண்டா யிருக்கின்றன. சூனியவாதிகளு டைய சித்தாந்தத்தை நம்புவது ஒன்று. எல்லாம் ஒன்றுமில்லை. நமக்கொன்றும் தெரியாது. முன்னுக்கு இனிமேல் வரப்போகிற விஷயங்களைப்பற்றியாவது

நடந்துபோனவைகளைப் பற்றியாவது அல்லது தற்காலத்தியவைகளையாவது கொஞ்சம் கூட தெரிந்துகொள்ள ஒருபோதும் நம்மாலாகாதென்பது இவர்களது கொள்கை. நடந்துபோனவைகளையும் இனிமேல் வரப்போகிறவைகளையும் பொய்யானது, இல்லாதவைகளென்று தள்ளி தற்காலத்தியவைகளில் மாத்திரம் பற்றுள்ளவனை பைத்தியக்காரனென்று சொல்ல வேண்டும். சூனிய வாதிகளுடைய கொள்கையை அங்கீகரிப்போமானால் தாய் தகப்பனில்லாமல் பிள்ளைமாத்திரம் குதித்து விட்டான் என்று சொல்லுவதும்கூட நியாயமாகத்தானே இருக்கிறது! முன்னுமில்லை பின்னுமில்லை என்றால் மத்திய அவஸ்தையையும் கட்டாயம் இல்லை யென்றே மறுக்க வேண்டும். இது சூனியவாதிகளுடைய சித்தாந்தம். பிரத்திய க்ஷமாக தான் முக்காலத்திலு மிருந்துகொண்டு எப்போதும் ஒன்றுமில்லை என்று சொல்லி சொன்னபடி நிஜமாக ஒரு நிமிஷமாவது நடந்தவனை நான் ஒருபோதும் பார்த்ததில்லை. சுலபமாக சொல்லிவிடலாம்.

மற்றோர் பக்ஷமாவது, மேல்கண்ட கேள்விகளுக்கு சமாதானங்களைத் தேடுவது. ஸத்திய வஸ்துவைக் கண்டு பிடித்தல். நிலையற்றதும், சதா மாறிக் கொண்டிருப்பதுமான இவ்வுலகத்தில் சாச்வதமானது ஏதாவதுண்டா வென்று ஆராய்வது.ஜடபதார்த்த அணுக்களின் சேர்க்கையாலுண்டான நம்முடைய இந்ததேகத்தில் ஸத்தியமானது ஏதேனுமொன்றுண்டா? மனிதனுக்கு மனமென்ப தொன்றுண்டான காலமுதல் நாளதுவரைக்கும் இவ்வித சிந்தனையே மேற்கொண்டி ருக்கிறது. பூர்வம் வெகு காலத்திற்கு முன்னமேயே அவனுடைய உள்ளத்திற்கு ஸத்தியவஸ்துவின் ரகசியம் வெளியாகி இருக்கிறதாக அடிக்கடி நாம் காண்கிறோம். அப்போதே மனிதன் தன் ஸ்தூலதேகத்திற்கப்பால் ஒர் படி மேலுக்குப்போய் இத்தடி த்த தேகம் அழிந்துபோனபோதும் இதைக்காட்டிலும் உத்தமமானதும் பூரணமானதும் ஆனால் ஸ்தூல தேகச் சாயலையுடையதுமான ஓர் சூக்ஷ்மதேகம் தனக்குண்டென் பதை தெரிந்து கொண்டிருக்கிறான். ஓ அக்னிபகவானே! செத்துப்போன இந்த என்னு டைய உறவினனுக்கு உத்தமமானதும் பிரகாசம் பொருந்தியதுமான தேகத்தைத் தந்து துக்கமில்லாததும் அழியாததுமான எந்த உலகத்தில் என்னுடைய மூதாதைக ளான பிதுருக்கள் இருந்து வருகிறார்களோ அவர்களிடம் தங்களுடைய திருக்கரங் களால் மெதுவாகத் தாங்கிச் செல்லும் என்கிற பிரார்த்தனையை நாம் இருக்கு வேத ஸம்ஹிதையில் படிக்கிறோம். இதே எண்ணம் மற்றெல்லா மத சாஸ்திரங்களிலும் இருக்க நீங்கள் பார்க்கலாம். இதோடு கூட இன்னுமோ ரபிப்பிராயமுள்ளது. மனிதன் பூர்வத்தில் பரிசுத்தமானவன், எப்படியோ கெட்டு இப்போது தாழ்ந்த நிலையிலிருக் கின்றானென்று ஒன்று கூட தப்பாமல் எல்லாமதங்களும் மொழிகின்றன. புராண இதிஹாஸரூபமாக வெளியிடப்பட்டாலும், தெள்ளிய தத்துவ ஞானவசனங்களால் போதிக்கப்பட்டாலும், அழகு பொருந்திய காவிய கவிகளால் வர்ணிக்கப்பட்டிருந் தாலும், முக்கியமாக நாம் கவனிக்கத்தக்க இது ஓர் அரிய பெரிய விஷயமாம். மனிதன் உயர்ந்த நிலையிலிருந்து கெட்டு தாழ்ந்த பதவிக்கு வந்திருக்கிறான் என்னும் உண்மையையே ஒவ்வோர் மத சாஸ்திரமும் புராணமும் வெளியிடுகிறது. யூத ஜாதியார்களுடைய மத சாஸ்திரத்திலுள்ள "ஆதாமின் தாழ்வு" என்கிற கதையின் தாத்பர்யமும் இதேதான். இந்துக்களுடைய மத கிரந்தங்களில் இதையே மேலு மேலும் சொல்லியுள்ளது. முன் எப்போதோ ஓர் காலம் இருந்ததாம். அதை சத்திய

யுகம் என்கிறுர்கள். அக்காலத்தில் மனிதனுக்கு சாவில்ஐல. தான் இஷ்டப்பட்டால் சாகலாம். தனக்கிஷ்டமான வரையில் தேகத்தை வைத்திருக்கலாம். அவனுடைய மனது தைரியமானதாயும் பரிசுத்தமாயு மிருந்ததாம். அப்போது கெட்டதுமில்ஐல; துன்பமுமில்ஐல. அவ்வளவு சம்பூரணமான யுகம் மாறி இவ்வளவு தாழ்ந்தகலியு கமாக நிற்கிறதென்று சொல்லுகிறுர்கள். இன்னும் இவ்விருத்தாந்தத்தை சேர்ந்தாற் போல பிரளய சரித்திரம் ஒன்று எல்லா மதகிரந்தங்களிலும் சருவ சாதாரணமாக இருந்து வருகிறது. முந்தியகாலம் கெட்டு இப்போதிய காலம் உண்டாயிற்றென்று மதசாஸ்திரங்கள் சொல்லும் அபிப்பிராயத்தை ருசுப்படுத்த இப்பிரளய சரித்திரம் போதுமான சாக்ஷியாக இருக்கிறது. கால ஸ்திதி வரவர கெட்டுக் கொண்டேபோய் ஓர் அளவை அடைந்தபோது பிரளயம் வந்து மனிதர்களில் பெரும்பாகத்தை அடித் துக் கொண்டு போகிறது. மறுபடியும் பழைய உன்னத ஸ்திதிக்கு மேல்நோக்கிப்போக ஆரம்பிக்கிறது. மெல்ல மெல்ல உயர்ந்து கொண்டேபோய் இன்னுமொருதரம் பழைய பரிசுத்த பூரண நிஐலயை அடைகிறது. பைபிலின் பழைய ஏற்பாட்டிலுள்ள பிரளயத்தின் வரலாறு உங்களுக்கு தெரிந்திருக்கிறதல்லவா? இதே பிரளய சமாசாரம் பழைய பாபிலோனியர்களிலும், ஈஜிப்ட் ஜாதியார்களிலும் சீன தேசத்தவர் களிலும், ஹிந்துக்களிலும் சாதாரணமாக வழங்கி வருகிறது.

முன்ஞெரு காலத்தில் முனீசுவரராகிய மனுவானவர் கங்காநதிக்கரையில் தவஞ்செய்து கொண்டிருந்தார். அப்போதவரிடத்திற்கோர் சிறுமீன் வந்து தன்ஐனக் காப்பாற்றும்படி கேட்டுக் கொண்டது. தன்னெதிரிலிருந்த ஓர் சிறு பாத்திர ஜலத்தில் அதை எடுத்துப் போட்டு உனக்கென்ன வேண்டுமென்று மனு அதைக் கேட்டார். என்ஐன ஓர் பெரிய மீன் துரத்தி வந்தமையால் என்னுயிரைக் காப்பாற்றுவீரென்று தங்களிடம் வந்தேனென்றது. மனு அச்சிறுமீஐன பாத்திரத்தோடு தன் வீட்டிற் கெடுத்துப்போய் வைத்து மறுநாள் காஐலயில் பார்த்தபோது அந்தமீன் பாத்திரத்தளவு வளர்ந்திருந்தது. மனுவைப்பார்த்து நான் இப்பாத்திரத்தி லினிமேலிருக்க முடியாதெ ன்று சொல்லிற்று. அவர் அதை ஓர் குளத்தில் விட்டார். மறுநாள் பார்த்த போது குளத்தளவு வளர்ந்து நான் இனிமேல் இதிலிருக்க முடியாதென்றது. அதை அவர் எடுத்துக் கொண்டுபோய் ஓர் ஆற்றில் விட்டார். மறுநாள் காஐலயில் பார்த்தபோது அம்மீன் ஆற்றளவு பெருகி விட்டது. அப்போதம் மனுவானவர் அதை ஓர் சமுத்திரத்திலெடுத்து விட்டார். சமுத்திரத்தில் விடப்பட்ட அம்மீன் அவரைப்பார்த்து, "ஓ மனு! நான் இப்பிரபஞ்ச சிருஷ்டிகர்த்தா. நான் இவ்வுலகத்தை பிரளய ஜலத்தில் அமிழ்த்தப் போகிறேன். உனக்கு எச்சரிக்கை செய்யலாமென்று நிஐனத்து நான் இவ்வுருவெடுத்து உன்னிடம் வந்தேன். நீ ஓர் பெரிய பெட்டி செய்து அதில் ஒவ்வோர் ஜீவராசியில் ஒரு ஆஐணயும் பெண்ஐணயும் விட்டு உன்னுடைய குடும்பத்தாரோடு அதிலிரு. ஜலமட்டத்திற்குமேல் என்னுடைய கொம்புகள் வரும். அக்கொம்புகளில் அப்பேழையைக் கட்டிவிடு. பிரவாகம் அடங்கியபோது வெளிக்கு வந்து பூமியில் பிரஜோற் பத்தி செய்' என்று சொல்லிற்று. அது சொன்ன பிரகாரமே ஜலப்பிரளயம் பூமியை மூடிக்கொண்டது. மனு தன் குடும்பத்தாரையும் ஒவ்வோர் ஜதை மற்றைய ஜீவஜாதியையும், பயிர் புல் பூண்டு செடி கொடிகளின் விதைகஐளயும், காப்பாற்றிவைத்து பிரளயம் தணிந்த போது வெளிக்கு வந்து

ஜீவோற்பத்தி செய்தார். நாம் மனுவின் சந்ததியாகையால் நம்மை நாம் மனிதர்களென்கிறோம்.

அது நிற்க, தன்னுள்ளிருக்கப்பட்ட சத்தியப் பொருளை வெளிப்படுத்த முயலும் செய்கையை மனிதன் பேசும் பாஷை என்கிறோம். குழந்தை தன்னுடைய தெளிவற்ற மழலைச் சொற்களால் மேலானதிலும் அதிக உத்தமமான தத்துவத்தை வெளிக்குக் கொண்டுவரப் பார்க்கிறது. ஆனால் குழந்தைக்கு பேசும் கருவிகள் பக்குவமாக வில்லை. உள்ளிருக்கும் உண்மையை வெளிக்குக் கொண்டுவரத்தக்க சாதனங்கள் அக்குழந்தைக்கு அமையவில்லை. உயர்ந்த தத்துவஞானிகளுடைய தத்துவஞான வார்த்தைகளும் குழந்தைகளுடைய மழலைச் சொற்களும் ஒன்றற்கொன்று அளவில் வித்தியாசப்படுகிறதே ஒழிய இனத்தில் பேதமில்லை. சொற்றிருத்தத்துடனும் கணக்குடனும் ஒழுங்காக பேசப்படும் தற்காலத்தவருடைய பாஷைக்கும், மங்கலானதும் மறைபொருளுள்ளதும் புராண (பழைய) காலத்து வார்த்தைகளுக்கு முள்ள பேதம் அளவிலேயே ஒழிய இனத்தில் கிடையாது. இவைகளுக்குப் பின்னால் அஸ்திவாரமாக ஓர் அரிய பெரிய விஷயம் குடிகொண்டிருக்கிறது. அது வெளிக்கு வர யத்தனம் செய்கிறது. சொல்லப்போனால், பூர்வீக (புராதன); கதைகளுக் கடியில் உண்மை தத்துவங்கள் யதேஷ்டமாக கிடக்கின்றன. அழகாக முலாம் பூசப்பட்டு பிரகாசிக்கும் இக்காலத்தவருடைய வார்த்தைகளுக்குப் பின்னால் ஒன்றுக்கு முதவாதனவும் கொடியனவுமான பொருள்களிருக்கின்றன வென்பதைச் சொல்ல வியசனப்படுகிறேன். ஆகவே, ஓர் நியாயம் அல்லது ஓர் அபிப்பிராயம் பூர்வீக (முன்கால) த்தியதென்றும், புராண கதைகளால் அலங்கரிக்கப் பட்டுள்ளதென்றும், அது தற்காலத்தவரான ஸ்ரீ இன்னாரின்னாருடைய அபிப்பிராயத்திற்கு ஒத்திருக்கவில்லை என்றும், அல்லது இன்ன இன்ன மாது ஸ்ரீ அம்மாளுக்கு சம்மதமில்லை என்றும் தள்ளிவிடக் கூடாது. பொதுவாக எல்லா மதங்களும் இந்த இந்த மஹாத்மாக்கள் போதித்துள்ள பூர்வீக சரித்திரங்களை நம்பவேண்டுமென்று சொல்லுகின்றன. யாதாவதோர் மதக்கிரந்தத்திலிருந்து ஒருவர் மேற்கோள் கொடுத்தால் நகைக்கிறவர்கள், இக்காலத்தவருடைய நவீன நூற்களிலிருந்து உபமான உபமேயங்களை எடுத்துச் சொல்லும் போது அவர்கள் இன்னும் அதிகமாக சிரிக்கவேண்டும். இக்காலத்திலொருவன் மோஸஸ், புத்தர், இயேசு இம்மஹான்களுடைய உபதேசங்களை எடுத்துச் சொன்னால் அவனை அவமதித்து நிந்திக்கிறார்கள். அவனே ஹக்ஸ்லீ, டிண்டால், டார்வின் முதலான லோகாயதப் பேர்வழிகளுடைய பெயர்களைச் சொல்லட்டும்! உப்பு, ஊறுகாபில்லாமல் எடுத்து விழுங்கி விடுகிறார்கள். ஹக்ஸிலி என்கிற துரை அவ்விதமாகச் சொன்னார். அது சரியானது; ஸர்வ சம்மதமென்கிறார்கள். நமக்குத் தானா மூடபக்தி கிடையாது! முந்தியது மதசம்பந்தமான மூடபக்தி என்றால், பிந்தியது தற்கால விஞ்ஞான சாஸ்திர மூடபக்தி. பாரமார்த்திக மூடபக்தி என்னும் வைராக்கியத்தால் பிராணாதாரமான ஆன்மலாபம் சித்தித்தது. தற்கால நவீன லோகாயத பிடிவாதப் பற்றால் துராசை பேராசை காமவிகாரம் சம்பாதிக்கப்படுகின்றன. பாரமார்த்திக வைராக்கியத்தால் கடவுளைக் காண்கிறான். உலகப்பிடிவாத ஆசையால் கசுமல அல்ப பேராவது அதிகாரமாவது கிடைக்கிறது. இதுதான் இரண்டிற்குமுள்ள தாரதம்மியம்.

# மனிதனது உண்மை ஸ்வரூபம்

இப்போது புராண கதைகளைப்பற்றிப் பேசுவோம். மனிதன் பூர்வத்தில் அதாவது ஆதியில் உயர்ந்த ஸ்திதியிலிருந்தான்; இப்போது தாழ்ந்த நிலையிலிருக்கிறன். மனிதன் தன் ஸ்வரூபத்தில் பரிசுத்தன் பூரணன்; இப்போது அசுத்தனுயும் அபரிபூரணனுயும் இருக்கிறதாக நினைத்துள்ளான் என்கிற எண்ணமே ஒவ்வோர் புராண கதைகளுக்குப் பின்னுல் எல்லாவற்றிலும் பிரதானமாக இருக்கிறதை நாம் காண்கிறேம். இக்காலத்திய நூதன ஞான ஆராய்ச்சியாளர்கள் இவ்வபிப்பிராயத்தை கொஞ்சம்கூட அங்கீகரிக்கிறதில்லை என்று தெரிகிறது. பரிணுமவாதிகள் இக் கொள்கை முழுமையுமே சரியானதல்ல வென்று மறுத்துப் பேசுகிறதாகக் காண்கிறது. மிகத்தாழ்ந்த, மிகச்சிறிய, கண்ணுக்கும் தெரியாத உருவத்திலிருந்து மனிதன் காலாந்தரத்தில் வளர்ந்து வந்தவனென்பது இவர்களது கொள்கை. ஆகவே புராண ஏற்பாடு. இவர்களுக்கு சரிப்படுவதில்லை. இருந்தாலும், இந்தியா தேசத்தில் பழைய சரித்திரம் ஒன்றுள்ளது. அது இவ்விரு அபிப்பிராயங்களையும் சமரஸப் படுத்துகிறது. இந்திய நாட்டின் பூர்வீக புராண சாஸ்திரத்தில் கல்பம் அல்லது காலசக்கரத்தைப் பற்றி வர்ணித்துள்ளது. அக்காலசக்கர வர்ணனையின்படி எல்லா அபிவிருத்திகளும் அலைகளைப் போன்றவை. மேலுக்குகழுந்த அலையானது கட்டாயம் கீழே விழுந்து தண்ணீரில் மறையவேண்டும். மறைந்தது மறு நிமிஷத்தில் கிளம்பும். கிளம்பியது பின்னும் கீழே விழும். இதே மாதிரி மேலுமேலும் நடக்கிறது. இவ்வித சலனங்கள் வட்டவடிவமானவைகள். தற்காலத்திய நவீன ஞான ஆராய்ச்சிக்காரர்களிஷ்டப் படியும்கூட இது சரியானது தான். மனிதன் எப்போதுமே முன்னுக்குப் போய்க் கொண்டிருக்க முடியாது. விதை மரமாகி மரம் விதையில் ஒடுங்குவதுபோல, விகாசப்பட்டு அதாவது விரிந்து வளர்ந்து மேல்நோக்கி அபிவிருத்திக் குரியவைகளெல்லாம் தாழ்ந்து கீழ்நோக்கி ஒன்றில் ஒடுங்குவதென்கிற செய்கையை நினைப்பூட்டுகிறது. ஓர் யந்திரத்திற்குள் எவ்வளவு சக்தியை நீங்கள் அடைத்தீர்களோ, அவ்வளவு சக்தியைத் தான் அவ்வியந்திரத்தின் மூலமாக நீங்கள் பெறலாம் என்று இக்காலத்திய விஞ்ஞான சாஸ்திரி உங்களுக்குச் சொல்லுவார். ஒன்றுமில்லாததிலிருந்து இனியொன்றை உண்டாக்க முடியாது. ஒருவன் மிகச் சிறிய பிராணியாயிருந்து விரிந்து வளர்ந்து வந்தவனுனல் பூரண மனிதர்களான புத்தர், ஏசுகிறிஸ்து அச் சிறிய உருவத்தின்கண் ஒடுங்கி இருந்தவர்களேயாவர். அப்படிக்கில்லா விட்டால் இப் பிரஹ்மாண்டமான மஹா புருஷர்கள் எங்கிருந்து வந்திருக்கலாம் சொல்லுங்கள் பார்ப்போம். ஒன்றுமற்ற சூனியத்திலிருந்து யாதும் உற்பத்தியாகாதென்கிற நியாயமும் உங்களுக்குத் தெரியும். இப்போது தற்காலத்திய ஞானப் பிரகாசத்தோடு முற்காலத்திய மதசாஸ்திரங்களை ஒற்றுமைப்படுத்தி உண்மையைத் தெரிந்துகொள்ளும் நிலைமைக்கு வந்திருக்கிறேம். எந்த சக்தி அநேக பிறவிகள் வழியே கொஞ்சம் கொஞ்சமாக வெளிக்கு விஜ்ரும்பித்து விரிந்துகொண்டே வந்து பூரண மனிதனை உண்டாக்கிற்றோ அந்த சக்தி ஒன்றுமில்லாத சூனியத்திலிருந்து வந்திருக்காது. அது எங்கேயாவது இருந்திருக்கவேண்டும். மிகச் சிறிய முதல் உருவத்திலிருந்து மனிதன் பிறப்பிற்குப் பிறப்பு படிப்படியாய் வளர்ந்துவந்தானென்பதை நீங்கள் அங்கீகரிக்கிறபடியால் அச்சிறு உருவம் எப்படியோ ஒரு விதத்தில் அச்சக்தியை உள்ளடக்கி வைத்திருக்க வேண்டும்.

# மனிதனது உண்மை ஸ்வரூபம்

ஜட அணுக்களின் கூட்டத்தாலாய தேகமானது ஆத்மாவை அல்லது எண்ணம் என்கிற சக்தியை உண்டாக்குகிறதா? இல்லாவிட்டால் ஆத்மாதான் தேகத்தை அல்லது எண்ணம் என்கிற சக்தியை சிருஷ்டிக்கிறதா? என்கிற தர்க்கம் நடந்து வருகிறது. ஆனுல் உலகத்திலுள்ள எல்லா மதங்களும் நினைவுதான் தேகத்தை சிருஷ்டிக்கிறதே ஒழிய தேகம் ஆத்மாவை உண்டாக்குகிறதில்லை என்று போதிக்கின்றன. உறுப்புகளெல்லாம் ஒன்றேடொன்று சேர்ந்து தேகமெனும் யந்திரம் உண்டாகும்போது வெளியாகும் சக்தியை நினைவு அல்லது ஆத்மா வென்று தற்காலத்திய நூதன ஞான ஆராய்ச்சிக்காரர்கள் அபிப்பிராயப் படுகிறுர்கள். ஸ்தூல சூக்ஷ்ம ஜட அணுக்களின் சேர்க்கையா லுற்பத்தியான மூளை யுள்பட தேகமாகிய யந்திரத்தினின்று ஆத்மாவோ அல்லது எண்ணத்திரளோ அல்லது வேறெந்த சக்தியோ வெளியாகிற தென்று சொல்லும் இவர்களுடைய அபிப்பிராயத்தை நாம் ஏற்றுக்கொள்ளுவோமானுல் நம்முடைய சங்கைகளுக்குத் தக்க சமாதானம் இவற்றுல் கிடைக்கமாட்டாது. தேகத்தை எது சிருஷ்டிக்கிறது? எது இதை செய்கிறது? எந்த சக்தி ஜட அணுக்களைக் கூட்டி தேக உருவத்தை ஆக்குகிறது? நம்மைச் சுற்றிலுமுள்ள ஜட பிரபஞ்சத்திலிருந்து வேண்டிய அளவு ஜட அணுக்களை கிரகித்து என்னுடைய தேகத்தை ஒரு மாதிரியாகவும் இனியொருவருடைய தேகத்தை இனியொரு விதமாகவும் இன்னும் இதே ரீதியாக மற்றைய தேகங்களை யும் செய்து வருவது யாது? இதோ காணப்படுகிற கணக்கற்ற பேதா பேதங்களை ஆக்கியதார்? ஆத்ம சக்தியானது தேக அணுக்களின் சேர்க்கையால் உண்டாகிற தென்பது குதிரையின் முன் வண்டியை நிறுத்துவது போன்ற அசம்பாவிதமானது. கூட்டிவைக்கிறவர் ஒருவர் இல்லாவிட்டால், ஜட அணுக்களைத் திரட்டி உருவாக்குகிற ஓர் சிற்சக்தி யில்லாவிட்டால் உருவங்கள் எப்படி வரும்? ஜட அணுக்களைக் கூட்டி உருப்படுத்தி ஓர் தேகத்தைச் செய்தது ஓர் பிரத்தியேக ஆன்மசக்தி யென்றும், ஆன்மாவென்பது அவ்வுருவத்தின் உறுப்புகள் ஒன்றே டொன்று சேர்ந்து தேகமான போது வெளிவந்த ஓர் சக்தி என்றும் நீங்கள் சொல்வீர்க ளானுல் ஜட அணுக்களைத் திரட்டி தேகத்தை அமைத்த அம்முதல் சக்தியும் இனி யோர் தேக ஜட அணுக்களின் சேர்க்கையால் உற்பத்தியாக்கப் பட்டதாக வல்லவோ ஆகிகிறது.

இது தக்க சமாதானமாகாது எந்த சித்தாந்தம் பெரும்பான்மை எல்லா அரிய பெரிய விஷயங்களையும் விளக்கிக் காட்டி இதுவரையில் ஏற்பட்டு நிலைத்துள்ள மற்றெல்லாக் கொள்கைகளையும் கண்டிக்காமல் சர்வ சம்மதமாக சமரசப்படுத்த வல்லதோ அப்பேர்ப்பட்ட சித்தாந்தத்தையே நாம் அங்கீகரிக்க வேண்டும். எந்த ஞான சிற்சக்தி பூத பௌதிக ஜடப்பொருள்களை எடுத்து தேகத்தை உருவாக்குகிறதோ அதே சிற்சக்திதான் அத்தேகத்தின் மூலமாக பிரகாசித்து அதை நடத்தும் ஆத்மா வென்று சொல்லுவது மிகவும் நியாயமானதாக இருக்கிறது. மேலும் தேகத்தின் மூலமாக வெளியாகும் ஆத்மசக்தி ஜட அணுக்களின் கூட்டுறவாலாகிற தென்பது பொருளற்ற வெறும் சொல்லாக முடிகிறது மல்லாமல் அவ்வித சக்திக்கு சுய, பிரத்யேக, சுதந்திர இருப்பு இல்லாமல் போகிறது. பூத பௌதிக ஜடத்தினின்று சித் ஸ்வரூப ஆத்மா ஒருக்காலு முண்டாகாது. வேண்டுமானுல் நாம் எதை பூத பௌதிக ஜடமென்கி றேமோ அதை இல்லவே இல்லை என்று ரூபித்து விடலாம். ஜடமென்பது சித்

ஸ்வரூப ஆன்மாவின் ஓர் வித நிலை அல்லது அவஸ்தைக்குப் பெயர். கடினம், கனம், உறுதி, வைரம், முதலிய ஜடபதார்த்தங்களின் தன்மைக ளெல்லாம் அசைவு அல்லது சலனத்தினுடைய காரியங்களாம். திரவப் பொருளுக்கு நீர்ச்சுழியைப்போல கொடுக்கப்பட்ட சுழலும் சலனத்தை அல்லது ஓட்டத்தை அதிகப் படுத்திக்கொண்டே போனல் அத்திரவப் பொருள் கெட்டியாக இறுகிப்போய் கட்டிப்பொருள்களின் குணங் களை அடைகிறது. பிரசண்ட மாருதத்தின்போது நடை பெறுவதுபோல அதிகவேகத்து டன் சுற்றப்படும் காற்று வஜ்ரத்தைப்போல இறுகி அதனல் தாக்கப்பட்ட அல்லது மொத்துண்ட கடினவஸ்துக்களெல்லாம் தூளாய்ப் போகின்றன. சிலந்திப்பூச்சி கட்டும் கூண்டின் நூலை எடுத்து அளவுக்கு மிஞ்சின வேகமாக சுழற்றும் பக்ஷத்தில் இரும்புச் சங்கிலி எவ்வளவு பலமானதும் கெட்டியானதுமோ அதைப் போல சிலந்தி யின் சரடும் ஆய்விடுவது மல்லாமல் வெகு சுலபமாக அதிக கடினமான ஓர் ஒலிவமரத்தை அறுத்துத் துண்டாக்கிவிடும். ஆத்ம சக்தியை இவ்விதமாக ஆராய் ந்து பார்க்கில் பூதபௌதிக ஜட பதார்த்தம் ஒன்று உண்மையிலில்லை என்றே சுலபமாக ருசுப்படுத்தி விடலாம். ஆனல் ஜட அணுக்கள் ஒன்றேடொன்று சேருவதால் ஆத்மா உற்பத்தி யாகிற தென்பதை ருசுப்படுத்த முடியாது.

சுயமாகத் தானே, தேகத்தின் மூலமாக விளங்கிவரும் இச்சக்தியின் லக்ஷணம் யாது? அது எத்தன்மையது? அது எப்பேர்ப்பட்ட தானலும் இருந்தது இருந்தபடியே பூத பௌதிக ஜட அணுக்களை எடுத்து அவைகளைக் கூட்டி மானிட தேகத்தை செய்து உருவாக்குகிற தென்பது நம்மெல்லாருக்கும் தெரிகிறது. எனக்காக வேனும், உங்களுக்காகவேனும், வேறே யாராவது வந்து தேகாதிகளைச் செய்து கொடுத்தார்களா? எனக்காக வேறெருவர் சாப்பிட்டு என் பசியை ஆற்றினதை நான் பார்த்தறியேன். சாப்பிட்டதை ஜீரணித்து சாப்பிட்ட ஆகாரத்திலிருந்து ரத்தம், எலும்பு முதலானவைகளை நானே உண்டாக்குகிறவனுக இருக்கிறேன். **நான்** என்கிற இவ்வதிசய அதி அற்புத ரகசிய சக்தி எப்பேர்ப்பட்டது? எத்தன்மைது? தேகமூலமாக நாம் பார்த்ததற்கு முன்னும் தேகப்போய் நாம் நமது கண்களால் பார்க்கமுடியாத நிலையிலிருக்கும்போதும் **ஆத்மா**வைப்பற்றி சொல்லும் விஷயங்கள் பலருக்கு அருவருக்கத்தக்கதாயும் பயங்கரமானதாகவும் இருப்பதோடு, இவ்வபிப் பிராயங்க ளெல்லாம் வெறும் மனேபாவங்களென்று அவர்கள் சொல்லுகிறுர்கள்.

இப்போது நம்முன் பிரத்தியக்ஷமாக நடைபெறும் காரியங்களை நடத்திவரும் சக்தியின் சுவரூபம் இன்னதென்பதாக ஆராய்ந்து அறிவோம். நம்மை நடத்தி நம்மூலமாக வேலைசெய்யும் இச்சக்தி எத்தகையது? முன்காலத்தில் பூர்வீக மத சாஸ்திரங்களிலெல்லாம் ஓர் தேகத்தில் பிரகாசிக்கும் இச்சிற் சக்தியை, ஸர்வ வல்லமைக்கு மாதாரமான **ஆத்மா**வை ஓர் பிரகாசப் பொருளென்றும், இத்தேகச் சாயலையுடைய தென்றும், இந்த ஜட ஸ்தூலதேகம் நாசமான பின்பும் நிலைத்திருந்ததென்றும் கருதி வந்ததாக நமக்குத் தெரிகிறது. இதற்கு கொஞ்ச காலத்திற்குப் பிறகு இப்பிரகாச சூக்ஷ்மதேகம் ஆத்மாவல்ல வென்கிற மற்றேர் மேலான அபிப்பிராயம் உதித்து பகிரங்கமாக பரவ ஆரம்பித்தது. எதெதற்கு ரூபம் உண்டோ அதெல்லாம் அணுக்களின் கூட்டத்தாலாய தென்றும் அதை நடத்த ஓர் ஞான சிற்சக்தி வேண்டியதென்று மாகிறது.

# மனிதனது உண்மை ஸ்வரூபம்

இந்த ஸ்தூல ஜடதேகத்தைச் செய்ய ஓர் விதேக ஆத்ம சக்தி வேண்டிய தானுல் பிரகாச சூக்ஷ்ம தேகத்தையும் உண்டாக்க இதைக் காட்டிலும் வேருன தேகமற்ற ஓர் சிற்சக்தி வேண்டியது அத்யாவசியகமானது. ஆகவே இவ்வித சிற்சக்திக்கு ஸம்ஸ்கிருத பாஷையில் ஆத்மா வென்று பெயர். **இவ்வாத்மா**தான் இருந்தபடியே பிரகாச சூக்ஷ்ம தேக மூலமாக ஸ்தூல தேகத்தில் வேலை செய்வது. பிரகாசம் பொருந்திய சூக்ஷ்ம தேகமானது மனதிற்கு வாசஸ்தானமாக நினைக்கப் பட்டுள்ளது. ஆத்மா இப்பிரகாச சூக்ஷம தேகத்திற் கப்பாலானதும் அதைக் காட்டிலும் மேலானதுமாம். ஆத்மா மனதல்ல. மனதை நடத்துவது. அது மனதின் வழியாக தேகத்தை நடத்துவது. எனக்கோர் ஆத்மா இருக்கிறது. உனக்கோர் ஆத்மா உண்டு. நம்மில் ஒவ்வொருவருக்கும் தனித்தனி ஒவ்வோர் ஆத்மா இருக்கிறது. அப்படியே ஒவ்வொருவருக்கும் ஒவ்வோர் மெல்லிய சூக்ஷ்ம தேகமும். அதன் மூலமாக நாம் ஒவ்வொருவரும் ஸ்தூல வெளி தேகத்தில் வேலை செய்கிறோம்.

பிறகு ஆத்ம ஸ்வரூப லக்ஷணத்தைப்பற்றி விசாரிக்க தலைப்பட்டார்கள். **ஆத்மா**, **மனிதனது ஜீவாத்மா**, அது மனதுமல்ல தேகமுமல்ல வென்றால் மற்றெவ்விதமானது? தர்க்கங்களும் சம்வாதங்களும், ஒன்றன்பின் ஒன்றுக கிளம்பிக் கொண்டே யிருந்தன. அதற்குப் பிறகு என்னென்னமோ மனோ பாவனைகளெல்லாம் உண்டாக்கப் பட்டன. பலவித தத்துவஞான ஆராய்ச்சி கிரந்தங்களெல்லாம் வெளியா க்கப் பட்டன. இந்த ஆத்மாவைப்பற்றி ஸ்திரமாக சித்தாந்தப் படுத்தப்பட்ட தீர்மானங் களை எல்லாம் உங்கள் முன் கொண்டுவந்து உங்களுக்குத் தெரியச் சொல்ல முயல்கின்றேன். வெவ்வேறுன எல்லா தத்துவ சாஸ்திரங்களும் ஆத்மா எப்பேர்ப் பட்டதானுலும் அதற்கு உருவமாவது சாயலாவது இல்லை என்று ஏகோபித்து ஒரே மனதாக சொல்லுகிறதாக தெரிகிறது. அத்துடன் உருவமும் வடிவமுமில்லாத ஒன்றை எங்கும் நிறைந்த சர்வ வியாபகப் பொருளென்றும் போதிக்கின்றன. மனது ண்டான போது காலம் பிறக்கிறது. இடமும் மனதில் தானிருக்கிறது. வர்த்தமானங் கள் அதாவது காரண காரிய நிகழ்ச்சிகள் காலத்தை விட்டு தனித்திருக்கா. தொடர்ச்சியாக ஒன்றன்பின்னென்றுன விஷய நிகழ்ச்சிகள் இல்லா விட்டால் காரண காரியங்களே இல்லை. ஆனது பற்றி காலதேசவர்த்தமானங்க ளெல்லாம் மனதினிடமேதா னுள்ளது. **ஆத்மா** வென்பது மனதிற் கதீத மானதும் உருவமற்றது மாகையால் கால தேச வர்த்தமானத்திற் கப்பாற் பட்டதே யாகிறது. காலதேச வர்த்தமானத்திற் கப்பாற்பட்டதானுல் அது எல்லையற்ற அகண்ட வஸ்துவாகவே இருக்க வேண்டும். இப்போது நம்முடைய தத்துவ ஞானத்தில் மேலானதிலும் அதிக மேலான அபிப்பிராயமானது வெளி வருகிறது. அகண்ட பரிபூரண வஸ்து இரண்டு அல்லது துவிதமாக இராது. ஆத்மா அகண்ட எல்லையற்ற பொருளானுல் அத்வைத, ஏக, ஒரே ஒரு ஆத்மாவாகத் தானிருக்க வேண்டும். எனக்கோர் ஆத்மா உனக்கோர் ஆத்மா இன்னும் அவரவருக்கு வெவ்வேறுன ஆத்மாக்களென்று சொல்லுவதெல் லாம் தப்பானது. ஆகையால் யதார்த்த (உண்மை) மனிதன் ஒருவனே. அவன் அகண்ட எல்லையிலா ஸர்வ வியாபகரான ஆத்மா. எங்கும் நிறைந்த பரிபூரண அகண்ட அத்வைத ஆத்மாவை கண்ட, பரிச்சின்னமாம், துணித்து ஓர் அளவுக்குட்படு த்தி பார்ப்ப தெதுண்டோ அதை ஜீவனென்றும் சாயா, நிலையில்லா, பொய்த்தோற்ற, சாமானிய மனிதனென்றும் சொல்லுகிறோம். இந்த அர்த்தத்தில் புராண வாக்கியங்க

ளெல்லாம் உண்மையானவையே. சாமானிய சாயா மனிதன் எவ்வளவு பெரியவனு ஞலும் தேக மனே நிலைகளுக்கப்பாற்பட்ட அகண்ட ஆத்ம சைதன்னியத்தின் மங்க லான சாயலே அவனென்றறியுங்கள். யதார்த்த மனிதன் அதாவது ஆத்மா காரண காரியத்திற் கப்பாற்பட்டவனுகையால் கால தேசத்தாலும் கட்டுப்படாதவன். ஆகவே அவன் சுதந்திர புருஷனுக இருக்கவேண்டும். அதாவது அவன் முக்தன். அவன் முன் எப்போதும் பத்தனுக இருக்க வில்லை. இனிமேலும் அவனை யாதும் கட்டுப்படுத் தாது. சாமான்ய சாயா மனிதன் காலதேச வர்த்தமானத்தால் அளவுபடுத்தப் பட்டிருக் கிறபடியால் அவன் **பத்தன். சம்சாரி.** அல்லது நம்முடைய தத்துவ ஞானிகளின் வசனப்படி அவன் பத்தனுக தென்படுகிறுன். அதாவது கால தேச வர்த்தமானங்களால் கட்டுப்பட்டவனைப்போல் காண்கிறுன். ஆனுல் உண்மையில் அப்படிப்பட்டவனல்ல. அவன் அப்படி கட்டுண்டில்லை. நம்முடைய ஆத்மாவினிடத்தில் இது யதார்த்தமா னது.. நம்முடைய ஆத்மா விதேஹி. தேகமற்றவன். ஸர்வவியாபகன். எங்கும் நிறைந்த பரிபூரணன். எல்லையில்லா அகண்டன். ஒவ்வொருவருடைய ஆத்மாவும் எல்லையற்ற அகண்ட ஸ்வரூபம். ஆத்மாவினிடத்தில் பிறப்பு இறப்பென்பதே கிடையாது.

பாடசாலையில் வாசிக்கும் சிறுவர்களில் சிலரை பரீக்ஷகர் முன்பாகக் கொண்டு வந்தார்கள். பரீக்ஷிக்க வந்தவர் அக்குழந்தைகளை மிகவும் கடினமான கேள்விகளைக் கேட்டார். பூமி ஏன் கீழே விழுகிறதில்லை என்பது அவர் கேட்ட கஷ்டமான வினுக்களில் ஒன்று. பரீக்ஷகர்தான் கேட்ட கேள்விக்கு விடை பூமி தன்னிடத்துள்ள ஆகர்ஷண சக்தியினுதவியால் கீழே விழாமலிருக்கிற தென்பது. இவ்விதமாக அச்சிறுவர்கள் பதில் சொல்லுவார்களென்று அவர் பார்த்தார். அநேகமாக யாரும் பதிலளிக்கவில்லை. சிலர் பூமிக்குள்ள ஆகர்ஷண சக்தியா லென்றும் இன்னும் இதற்குச் சம்பந்தமான ஏதோ ஒன்றைச் சொன்னுர்கள். சூக்ஷ்ம புத்தியுள்ள ஓர் சிறுபெண் ஐயா! பூமி எங்கே விழும்? என்று பரீக்ஷகரைக் கேட்டாள். அவர் கேட்ட கேள்வியில் யாதொரு சாரமு மில்லை. பூமி எங்கேவிழும்? அது விழ இடம் எங்கே? பூமி விழவாவது, எழவாவது. பிரஹ்மாண்ட அகண்ட வெளியினிட த்தே கீழெங்கே? மேலெங்கே? மேலும், கீழு மென்பதெல்லாம் ஒன்று மற்றென்றைப் பற்றியுள்ள விடத்திற்றானே. அகண்ட எல்லையிலா ஒன்று எங்கே போகும். எங்கே வரும். எங்கிருந்து வந்து எவ்விடத்திற்கு அது போகவல்லது.

இவ்விதமாக ஜனங்கள் சென்றதைப்பற்றி சிந்திக்காமலும், நாளை வருவதைப் பற்றி நினைக்காமலும், தேகம் ஓர் அளவுக்குட்பட்டு வருவதும் போவதுமாக இருப்ப தால் அதனிடத்தபிமான மில்லாமலு மிருப்பரேல் அவர்கள் ஆத்மஞானத்தில் விழித் துக் கொண்டவராவர்.

தேகம் உண்மையான மனிதனல்ல. மனம் விரிவதும் ஒடுங்குவதுமாக இருப்பதால் அதுவும் யதார்த்த மனிதனுகாது. யதார்த்த (சத்திய) மனிதன் ஆத்மாவே. அதுதான் சாசுவதமானது. அழியாதது. சாவில்லாதது. மனதிற்கும் தேகத்திற்கு மப்பாற்பட்டது. தேகமும் மனதும் சதாமாறிக் கொண்டிருக்கிறது. வாஸ்தவமாகவே மனதும் தேகமும் எப்போதும் மாறிக் கொண்டிருக்கும் ஓர்வித காக்ஷியின்

ஒவ்வோர் அடுக்குக்குரிய வெவ்வேறன பெயர்களாம். எப்படி ஆற்றுத் தண்ணீர் இடத்தை விட்டு இடம் நிலை கொள்ளாமல் ஓடிக் கொண்டிருந்தாலும் பார்வைக்கு ஒரே ஜலமயமாகக் காணப்படுகிறதோ அதேமாதிரி இத்தேகத்தின் ஒவ்வொரு அணுவும் ஓயாமல் இடத்தை விட்டு இடம் திரிந்து கொண்டிருக்கிறது. எவனுக்கும் தன் தேகத்தை நிமிஷக்கணக்காகவாவது ஒரே ஸ்திதியில் வைத்திருக்க முடியாதா ஞலும் கொஞ்ச நேரத்திற்கு முன் இருந்த தேகமே கொஞ்ச காலத்திற்குப் பிறகும் நமக்கிருக்கிறதாக நாம் நினைக்கிறோம். மனதும் ஒரு நிமிஷம் சுகமாக இருக்கும். மறுநிமிஷத்தில் துக்கப்படும். ஒரு க்ஷணம் தைரியமாக இருக்கும். மறு க்ஷணத்தில் அதைர்யப்படும். ஓய்ச்சல் ஒழிவில்லாமல் சுற்றிக்கொண்டிருக்கும் நீர்ச்சுழலைப் போன்றது. மனம் எல்லை இல்லா அகண்டாகார ஆத்மாவாகமாட்டாது. மாறுதல்க ளெல்லாம், விகாரங்களெல்லாம் ஓர் அளவுக்குட்படுத்தப்பட்ட, குறுகிய பின்னப் பொருள்களிடத்தில் தான் நடக்கக்கூடும். எல்லையில்லா அகண்ட வஸ்து விகாரத் தை அடைகிறதென்பது ஒப்பத்தகாததும் யுக்திக்கு விரோதமானதுமாம்.

அகண்ட பூரணவஸ்துவாகிய **ஆத்மா**வினிடத்தில் இவ் வித வியவகாரங்கள் நடக்காது. நீங்கள் இவ்விடத்தை விட்டு இனியோரிடத்திற்கு போகக் கூடும். நானும் போகலாம்.வரலாம். ஏனென்றல், நாமெல்லாம் சின்னஞ்சிறிய துணித்த ஓர் அளவுக் குட்படுத்தப்பட்ட தேகங்களையுடையவர்கள். இப்பிரபஞ்சத்தில் ஒவ்வோர் அணுவும் ஆற்றுப்பெருக்கின் ஜல அணுக்கள் ஒடிக்கொண்டே யிருப்பதுபோல ஒன்றன்பின் ஒன்றுக ஓடிக்கொண்டே யிருக்கிறது. இம் மொத்தப் பிரபஞ்சத்தையே ஒருருவாக எடுத்துக்கொண்டால் அது எங்கே அசையும்? எப்படி மாறும்? ஒன்றைப் பற்றி இனியொன்றினிட முண்டாகும் அசைவுக்கு சலன மென்று பெயர். இனியொன்றை முன்னிட்டு நான் நகருகிறேன். இப்பிரபஞ்சத்தில் எந்த ஓர் அணுவும் இனியோர் அணுவின் சம்பந்தத்தாலேயே சலிக்க முடியும். இவ்வையகத்தையே மொத்தமாகத் திரட்டி ஓர் ஒப்பற்ற தனிப்பொருளாக எடுத்துக்கொண்டால் மற்றெதன் நிமித்தமாக இது அசையலாகும்? இத் தனி ஒப்பற்ற மொத்தப் பிரபஞ்சத்தைக்காட்டிலும் வேறே பொருள் கிடையாது. ஆகவே இவ்வகண்ட ஒப்பிலா தனிப்பொருள் மாறுதலற்றது. அசைதலற்றது. பூரணமானது. இதுயதார்த்தமனிதன். ஆகையால் நம்முடைய யதார்த்தஸ்வரூபம் அகண்ட எல்லையிலா எங்கும் நிறைந்த பரிபூரண ஒன்றினிடத்து ள்ளதே ஒழிய, பின்னமான தாழ்ந்த ஓர் அளவுக்குட்படுத்தப்பட்டவைகளிடத் திலில்லை. சதா மாறிக் கொண்டிருக்கும், இடைவிடாமல் பிறந்து இறந்து கொண்டே யிருக்கும், வெறும் சிறு அல்ப பூச்சிகளுக்குச் சமானமானவர்களென்று நம்மை நாமே பாவித்துக்கொள்வது எவ்வளவுதான் சவுகரியமானதாக தென்பட்டாலும் இவைகளெல்லாம் பழைய பிராந்தியேயாம். எங்கும் நிறைந்த பரிபூரண ஆத்மாக்க ளென்று ஜனங்களை அழைக்குங்கால் அவர்கள் பயப்படுகிருர்கள். ஒவ்வொன்றின் மூலமாக நீ வேலை செய்கிறய். ஒவ்வொன்றின் பாதத்தின் மூலமாக நீ நடக்கிறய். ஒவ்வொருவருடைய வாக்கினின்று பேசுகிறவனும் நீயே. எல்லாருடைய ஹிருதய ங்களிலும் காருண்ய மயமாய் இருப்பவனும் நீயே.

இவ்விதமாக போதித்தால் ஜனங்கள் நடுங்குகிருர்கள். தங்களுடைய பிரத்யேக புருஷ ஸ்வரூபத்தை அழிக்காமல் வைத்திருக்கமுடியுமா, முடியாதா? வென்று

அடிக்கடி கேட்பார்கள். அவர்கள் அறிந்துள்ள பிரத்யேக ஜீவாத்மஸ்வ ரூபம் யாது? அது எப்பேர்ப்பட்டது? அதை நான் பார்க்க வேண்டும். குழந்தைக்கு மீசை கிடையாது. அது வளர்ந்து பெரியவனுன போது மீசை தாடி முளைக்கிறது. பிரத்யேக ஜீவாத்ம நிலை தேகத்தைப் பற்றியதாளுல் தேகம் மாறும் போது அவனுடைய பிரத்யேக ஜீவ ஸ்வரூபமும் மாற வேண்டியது தானே! பிரத்யேக ஆத்மபாவம் தேகத்தினிட மிருப்பதாளுல் என்னுடைய கைகளிலொன்றும் கண்களிலொன்றும் போய்விட்டால். என் ஜீவாத்மாவும் போய்விடு மல்லவா? தன்னந் தனிமையான பிரத்யேக ஜீவாத்மஸ்வ ரூபம் போய்விடுமென்கிற பயத்தால் குடியன் தன் பழக்கத் விடக் கூடாதுபோலாகிறதே! திருடன் திருடளுகவே யிருக்கலாமே. ஒருவனும் தன்னு டைய நடவடிக்கைகளை மாற்றிக்கொள்ளமாட்டானே. அப்படி மாற்றிக்கொண்டால் தன்னுடைய பிரத்யேகஜீவாத்மா மாறிவிடும் என்கிற பயம் இருக்கிறதே! பிரத்யேக ஜீவாத்ம நிலை அகண்ட அத்வைத ஆத்மாவினிடத்தேதானுள்ளது. அந்த ஆத்மநிலை தான் மாருதது. அதைத் தவிர்த்த மற்றவெல்லாம் மாறும் குணமுடையவைகள். பிரத்யேக ஜீவநிலை மனதினிடத்தும் அதாவது ஞாபக ரூபமாகவும்கூட இல்லை. தலை மேல் ஓங்கி ஓர் அடி அடித்ததாக வைத்துக்கொள்வோம். அவ்வடியின் உக்கிரத்தால் எல்லா வற்றையும் மறந்துவிடுகிறேன். அப்போது என் பிரத்யேக ஜீவாத்மா போய் விட்டது. நான் இல்லாமல் போகிறேன். மேலும் நான் குழந்தையாக இருந்த இரண்டு மூன்று வருஷத்திய சமாசாரங்களே என் கியாபகத்திலில்லை. ஞாபகசக்தியும் உண்மை சத்தியப் பொருளாகிய ஆத்மாவும் ஒன்ருளுல் மறந்ததெல்லாம் இல்லாமல் போனது தானே? என் ஜீவகாலத்தின் எந்த பாகம் என்னுடைய ஞாபகத்தி லில்லாமல் போய்விட்டதோ அக்காலத்தில் நான் பிழைத்திருக்கவில்லை என்ருகிறது. பிரத்யேக ஜீவாத்மாவைப் பற்றிய இவ்வித அபிப்பிராயம் மிகவும் தாழ்ந்ததும் அல்பமானதுமாம். இத்தகைய ஞானமுள்ள வரையில் நாம் நம்முடைய ஆத்ம ஸ்வரூப லக்ஷணத்தைத் தெரிந்தவர்களல்ல. ஆளுல் அகண்ட எல்லையில்லா தனித்த ஒன்றை அடைவதற்காக போராடிக் கொண்டிருக்கிருேம். கேவலம் தனித்த அகண்ட எல்லைஇலாத ஸத்திய வஸ்து எதுவோ அது தான் மனிதனது உண்மை ஸ்வரூபம்.

எவன் ஸர்வலோக வியாபகனே அவனுக்குத்தான் சாவில்லை. எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாக நம் முடைய நாட்டத்தை அல்ப அதாவது கண்ட, அளவுக்குட் படுத்தப்பட்ட பொருள்களிடத்தில் செலுத்து கிருேமோ அவ்வளவுக்கவ்வளவு சீக்கிரமாக் நாம் முடைய நாசத்தைக்கோரி செல்கின்கிருேம். அதாவது மரணத்திற் காளாகிருேம். எப்போது நாம் நம்மை ஸர்வ லோகங்களிலும் மற்றெல்லா பிராணிகளிலு மிருக்கக் காண்கிருேமோ அக்காலங்களில் மாத்திரம்தான் நாம் பிழைத்திருக்கிறோம். இவ்வல்ப வாழ்வில் பற்றுள்ளவரையில் நாம் செத்தவரே யாவோம். ஆகையால்தான் நாம் சாவுக்காக பயப்படுகிருேம். இவ்வையகத்தில் பிராணமயனுன தான் ஒருவனே உளனென்று எப்போது மனிதன் தெரிந்து கொள்ளுகிருனே அப்போதுதான் மரண பயத்தை அவன் ஜயிக்கமுடியும். மரணத்தை ஜயித்தவன்தான் பிழைத்துள்ளவன். அப்போதுதான் அவன் “நான் எல்லாப்பொருள் களிலிருக்கிறேன். ஒவ்வொரு தேகத்திலு மிருக்கிறேன் எல்லாப்பிராணிகளிலு

மிருக்கிறேன்" என்று தைரியமாகச் சொல்லுவான். அப்போதுதான் அவனுக்கு பயமற்ற நிஜல வரும். எப்போதும் மாறும் குணமுள்ள வஸ்துக்களிடத்தில் அழியாத் தன்மையைப் பற்றி பேசுவது பயனற்றது. **ஆத்மா** ஒன்றிற்கே பிரத்யேக, தனித்த, ஒப்பற்ற நிஜல உளது. ஏனென்றல் அது அகண்ட எல்ஜலயில்லாவஸ்து. அகண்ட எல்ஜலயிலா ஒன்றை எப்படி பகுக்கமுடியும்? எல்ஜலயில்லா அகண்டவஸ்துவை பின்னப்படுத்தவாவது, துண்டு துண்டாக துணிக்க வாவது முடியாது. எப்போதுமுள்ள கேவல தனித்த ஏகப் பொருள் அது. அவிச்சின்னன். எக்காலத்திலும் பிரிவுக்குட் படாத தனித்த ஒப்பில்லா ஒருவன். இவன் தான் பிரத்யேக, தனித்த, உண்மை மனிதன். ஸர்வத்திற்கு மதீதரான கேவலம் அத்வைத ஆத்ம ஸ்வரூபத்தை விளங்கச் செய்யும் போராட்டத்திற்கு சாயா சாமானிய மனிதனென்று பெயர்.

இவ்வித ஆத்மப் பிரகாசத்தை வெளிப்படுத்தும் செய்கை ஆத்மாவினிடத்தி லில்ஜல. துஷ்டன் நல்லவனாதல், மிருகத்திற்கு மிருக ஜன்மம் போய் மனிதப் பிறப்பு வருதல், வேறெவ்வித தற்பிரகாச அபிவிருத்தி வியவகாரங்களெல்லாம் ஆத்மா வினிடத்தில் நடப்பதில்ஜல. இவ்விதச் செயல்க ளெல்லாம் பூத பௌதிக ஜடப்பிரகிரு தியின் காரியமென்று முற்காலத்திய ஓர் சமஸ்கிருத தத்துவ ஞானி சொல்லி யிருக்கிறுர். நான் உங்கஜள பார்க்காதபடி இருதரத்தாருக்கு மத்தியில் ஓர் திரை இருப்பதாக வைத்துக் கொள்வோம். அத்திரையில் ஓர் துவாரம் உள்ளது. அதன் மூலமாக சிலருடைய முகத்தைத்தான் நான் பார்க்கமுடியும். சிலருடைய முகங்கள் மாத்திரம்தான் என் கண்களுக்குத் தென்படும். திரையினிடத்துள்ள துவாரம் பெரிய தாக பெருகிக்கொண்டே போனுல் நான் பார்க்கும் காக்ஷியும் அதிகரித்துக் கொண்டே போய் கடைசியாக மறைப்பு முழுதுமே நீங்கியபோது நான் உங்களெல்லாரையும் பார்க்கிறேன். உங்களோடு நான் நேருக்கு நேராக நிற்கிறேன். இந்த சந்தர்ப்பத்தில் நீங்கள் யாரும் மாறவே யில்ஜல. திரையின் துவாரம்தான் விரிந்து கொண்டே போய் முடிவில் இல்லாமல் போய்விட்டது. துவாரம் வளர வளர உங்களுடைய காக்ஷி அதிகரித்துக் கொண்டே வந்தது. இதே மாதிரிதான் ஆத்மாவினிடத்தும் நடை பெறுகிறது. பூரணத் தன்மையை இனிமேல் அடையப் போகிறதென்பதில்ஜல. நீங்கள் முன்னமேயே பந்தமில்லா பரிபூரண ஆத்மாக்கள். மத சம்பந்தமாகவும், கடவுஜளப் பற்றியும், மனிதன் செத்த பிறகு இன்ன விதமாக இருக்கிறுன் என்பதைப் பற்றியும், சாஸ்திரங்களும்.. பலவித அபிப்பிராயங்களும் உண்டாயிருக்கக் காரணம் யாது? மனிதனுக்கு தெய்வத்தை நாடும் குணம் எக்காரணத்தைப் பற்றியது? என்னத்திற்காக மனிதன் எத்தேசத்தானுனுலும், எந்த மதஸ்தனுக இருந்தாலும், தான் பின்பற்றி நடக்க சர்வ சுகுண சம்பூரணமான ஒன்றை மனிதர்களிலோ, தெய்வங்களிலோ, மற்றெவ்வஸ்துக்களிலோ இவைகள் எவ்விடத்தியவானுலும் தனதிஷ்ட தெய்வமாக நியமித்துக் கொள்ள வேண்டும்? ஏனென்றுல் இவைகளால் அடையவேண்டிய கடவுள் தன்னுள் இருக்கிறுர் கடவுஜள, ஆத்மாவை, அதாவது மனிதனது உண்மை ஸ்வரூபத்தை அறிய வேண்டி உன்னுடைய சொந்த ஹிருதயமே பதைபதைத்து துடித்துக் கொண்டிருக்கிறது. அதை நீ அறிந்துகொள்ளவில்ஜல. தெரியாத் தனத்தால் உன்னுள்ளத்திலிருந்து வரும் ஓசையை எங்கேயோ வெளியிலிருந்து உன்காதில் விழுவதாக நிஜனத்தாய். உன் ஹிருதய கமலத்தில் வசிக்கும் ஆத்ம ஸ்வரூபராகிய கடவுள் தன்ஜனத் தேடி அடையும்படி உன்ஜன தூண்டிக்கொண்டிருக்கிறுர். இங்கேயும்,

அங்கேயும், ஆலயங்களிலும், கோவில்களிலும், பூமியிலும், ஆகாயத்திலும் வெகு காலமாக தேடித் தேடி சுற்றிவந்து முடிவாக நீ எந்த இடத்திலிருந்து புறப்பட்டாயோ அந்தஸ்தானமாகிய உன் சொந்த சஹஜ ஆத்மாவினிடத்திற்குத் திரும்பி வந்து சேர்ந்து யாருக்காக நீ உலகமுழுதிலு மலைந்து திரிந்தாயோ, யாருக்காக கோவில்க ளிலும் கோபுரங்களிலும் நின்று கும்பிட்டு பிரார்த்தித்து பாடி ஆடி தேம்பித் தேம்பி அழுதாயோ, யாரைப்பார்க்கமுடியாமல் அஞ்ஞான மேகங்களால் மறைபட்டிருந்த தால் ரகசியப் பொருள்களைக் காட்டிலும் அதிரகசியப் பொருளாகப் பார்த்து வந்தா யோ, அவரை இப்பொழுது சமீபத்திலும் அதி சமீப வஸ்துவாகவும், அதுவே உன் சொந்த ஆத்மாவாகவும், தேக மன பிராணனை தரித்திருக்கும் சத்திய வஸ்து வாகவும் காண்கிறாய். அதுதான் உன்னுடைய உண்மை ஸ்வரூபம். இதை அங்கீகரித்து ஊர்ஜிதப்படுத்தி (பலப்படுத்தி) பிரகாசிக்கச் செய்யுங்கள். அதாவது ஆத்மானுசந்தானத்தால் ஆத்ம ஸ்வரூபர்களாக விளங்கிக் கொண்டிருங்கள். அசுத்தனாக இருந்து சுத்தனாக ஆகவேண்டுமென்பதல்ல. நீ முன்னமேயே, சுபாவத்தி லேயே பரிசுத்தனாக இருக்கிறாய். நீ பரிபூரணனாகவேண்டு மென்பதல்ல. நீ முதலி லிருந்தே பூரணனாக இருந்துவருகிறாய். பிரகிருதி, மாயை என்பது உண்மையைக் காணவொட்டாமல் மறைக்கும் முன்சொன்ன திரையைப் போன்றது. நீ நினைக்கும் ஒவ்வொரு நல்லெண்ணமும், நீ செய்யும் ஒவ்வொரு நற்காரியமும் அத்திரையைக் கிழிக்கும் சாதனங்களாம். திரை விலக விலக பரிசுத்தஸ்வரூபம் எங்கும் நிறைந்த அகண்ட எல்லையிலாக் கடவுள் மேலுக்கு மேல் பிரத்தியக்ஷமாகிறார். இதுதான் மனிதனுடைய பூரணசரித்திரம். மனிதனைப் பற்றி பூரணமாக தெரிந்துகொள்ள வேண்டிய விஷயம் இவ்வளவு தான். இத்திரை அல்லது மறைப்பு எவ்வளவுக் கெவ்வளவு சூக்ஷ்மமாகவும் மெல்லியதாகவும் குறைக்கப் படுமோ அவ்வளவுக் கவ்வளவு அதிகமாக அத்திரைக் கப்பாலுள்ள ஆன்மப் பிரகாசம் விளக்க மாகிறது.

சுயமாகப் பிரகாசிப்பது **ஆத்மா** அல்லது கடவுளின் சுவபாவம். அதைப்பார்க்க முடியாது. அதை அறிய பிரயத்னப்படுவதெல்லாம் வீணான காரியம். அது அறியப் படும் பொருளாக இருக்குமானால் அது உண்மையாக எப்படி இருக்கிறதோ அப்படி இருக்க முடியாது. அதுவே எப்போதுமுள்ள எல்லாவற்றையும் அறியும் ஒப்பற்ற பொருள். அறிதல் என்பது ஒன்றை ஓர் எல்லைக்குட் படுத்துவது. ஒன்றைவிஷயப் பொருளாக்குவது. ஆத்மாவே எல்லாவற்றையும் அறியும் நித்தியவஸ்து. இவ்வையகத்திய சாசுவத ஸர்வசாக்ஷி. அது உன் அகம் அல்லது ஆத்மா. ஞானமெ ன்பது ஆத்மாவினும் ஓர் தாழ்ந்தபடி.ஆன்மப்பிரகாசம் சற்றுமறைவுப்பட்டநிலை. அனாதிகாலமாக அல்லது எப்போதுமே நாம் யாதொரு உபாதியுமில்லா சசுயம் பிரகாச அறிவுருவ அகம் பொருளாகிய ஆத்மாவாக இருக்கிறோம். ஸர்வ உபாதியும் நீங்கி நின்ற நம்முடைய ஆத்மா அகண்ட ஸர்வ வியாபக ஏகப்பொருளாக இருப்பதால் அதை வேறுபடுத்தி நாம் காண்பதெப்படி? எல்லையிலா எங்கும் நிறைந்த பரிபூரண அத்வைத ஆத்மாவே ஒவ்வோர் மனிதருடையஉண்மை ஸ்வரூபம். ஒவ்வொருவனும் இதை வெளிக்குக் கொண்டுவரவே, அதாவது தன் சுய சொரூபத் தை மறைத்த உபாதியை நீக்கவே பல விதத்திலும் மன்றாடுகிறான். அப்படிக் கில்லா விட்டால் இத்தனை தரும சாஸ்திரங்கள் ஏற்பட்டிருக்க வேண்டிய தேன்? நற்குண நற் செய்கைகளை போதிக்கும் நீதி சாஸ்திரங்களுண்டா யிருக்க யாது காரணம்?

பரோபகாரமான காரியங்களில் தலை இடுங்கள்; மற்றெல்லாருக்கும் நல்லதையே செய்யுங்கள் என்கிற நன்னெறி வசனங்களை ஒவ்வொரு தரும சாஸ்திரத்தில் ஒவ்வோர் விதமாக விளக்கிக்காட்டி யிருந்தாலும், எல்லா தரும சாஸ்திரங்களிலும் இந்த ஒரு அபிப்பிராயமே நடுநாயகமாக விளங்காநிற்கிறது. மனிதர்களிடத்தும் மற்றெல்லாப் பிராணிகளிடத்தும் அன்புடையராயிருத்தல். தர்மகுண முடையராய் இருக்க வேண்டும் என்கிற சிந்தனையே மனித வர்க்கத்தை நடத்தும் சூத்திரமாக இருக்கவேண்டும். நான் இப்பிரபஞ்சமாக இருக்கிறேன். இப்பிரபஞ்சமெல்லாம். ஏகனான என்னுடைய சொரூபம் என்கிற இவ்வுண்மையை இவைகளெல்லாம் பகிரங்கமாக வெவ்வேறு விதமாக எடுத்துக் காட்டுகின்றன. இப்படிக் கில்லா விட்டால் சாஸ்திரங்களும் சன்மார்க்க நூல்களும் ஏற்படவேண்டியதற்குக் காரணம் எங்கே? என்னுடைய சுற்றத்தாருக்கு நான் ஏன் நல்லதைச் செய்யவேண்டும்? மற்றெல்லா ஜீவ ராசிகளுக்கும் கூட நான் ஏன் இதத்தைச் செய்யவேண்டும்? என்னிலிருந்து ஏதோ ஒன்று இப்படி இருக்கத் தூண்டுகிறது. அது அன்பு. அது அனுதாபகுணம். எவ்விடத்திலும் தானே நிறைந்திருப்பதா லுண்டாகும் சுவபாவ உணர்ச்சி. ஒவ்வோர் வேளையில் கல்லினும் வலிய நெஞ்சினையுடையவர்கள் கூட இதர பிராணிகள் படும் கஷ்டத்திற்காக பரிதாபப்படுகிறார்கள். தன்னஞ்ஞான கற்பிதத்தால் வாய்த்துள்ள ஜீவத்தன்மை வாஸ்தவத்திலில்லை. மயக்கத்தால் விளைந்தது. பொய்யான இச்சாயா மனிதனை ஆசிரயிப்பது தகாத காரிய மென்று சொல்வதைக் கேட்டு பயந்து நடுங்குகிறவன் கூட பூரண பரித்தியாகம் செய்யும்படி போதிப்பதே சகல தர்ம நீதி சாஸ்திரங்களின் முக்கிய கருத்தென்று உங்களுக்குச் சொல்லுவான். பூரண பரித்தியாகம் (எல்லாவற்றையும் துறத்தல்) என்பது யாது? மயக்கத்தால் வந்த சாதாரண சாயா மனிதனை ஒழிப்பது. இச்சாயா மனிதனிடத் துள்ள பற்றை அல்லது அபிமானத்தை விடுவது. தன்னயத்தை அதாவது சுயப்பிர யோசனத்தை விட்டு விடுவது. நான் எனது என்கிற அகங்கார மமகாரங்களை ஆகாரமாகக் கொண்டு ஜீவித்துவரும் இம்மாயா பொய் சாமான்யமனிதனுக்குதாயாக இருப்பது முந்திய அஞ்ஞானமாகும். எவ்வளவுக்கெவ்வளவு அகங்கார மமகாரத்தால் உப ஜீவித்துவரும் இச்சாயா மனிதன் மறைகிறானோ அவ்வளவுக் கவ்வளவு உண்மை மனிதனாகிய **ஆத்மா** தன் சுய சொரூபத்துடன் பிரகாசிக்க ஆரம்பிக்கிறது. சாமான்ய சாயா மனிதன் மறைந்துபோய் உண்மை மனிதனாகிய ஆத்மாவை தன் சொந்த ஸ்வரூபத்துடன் பிரகாசிக்கச் செய்வதே **மெய்யான துறவு**. இதுதான் ஸர்வ தர்ம நீதி சாஸ்திரோபதேசங்களின் முக்கியமானதும் நடுநாயகமுமான மொத்த சாராம்சம்.

இவ்வுண்மை மனிதர்களுக்குத் தெரியுமோ தெரியாதோ; ஆனாலும், இவ்வைய கமே ஆத்ம சாமீப்யத்தை நாடி, மெல்ல மெல்ல சென்று கொண்டிருக்கின்றது. ஆத்ம ஞானத்திற்கு சாதனமாகிய சர்வ சங்க பரித்யாகம் அல்லது துறவு எல்லாரிடத்திலும் பழக்கத்திலிருந்து வருகிறது. அது சிலரிடத்தில் அதிகமாகவும், சிலரிடத்தில் குறை வாகவும் இருக்கிறது. ஆனால், மனிதர்களில் பெரும்பாலோர் இன்னத்திற்காக இவ் விதமாகச் செய்கிறோம் என்கிற உணர்வு இல்லாமல் செய்கிறார்கள். அவர்கள் இதனது உண்மையை உள்ளபடி அறிந்து அனுஷ்டிப்பார்களாக. நான் எனது என்கிற அகங்கார மமகார ஸ்வரூபமான சாயா மனிதன் உண்மை மனிதனாகிய ஆத்மா வல்ல.

# மனிதனது உண்மை ஸ்வரூபம்

அகண்ட பரிபூரண ஆத்மாவின் கண்ட துணித்த ஓர் அளவு அல்லது ஓர் எல்லைக் குட்பட்ட சிற்றறிவுடைய ஜீவனென்று இதனிடத்துள்ள அபிமானத்தை அவர்கள் விட்டுவிட வேண்டும். இஜ்ஜீவன் அகண்ட எல்லையில்லா பிரகாச சத்தியப் பொருளின் தோன்றி மறைந்து போகும் படியான நிலையில்லா ஓர் சிறுசாயல் அல்லது ஒரு நெருப்புப் பொறியைப் போன்றது. ஆனால் இவன் யாருடைய சிறுசாயலோ அந்த ஆத்மா ஸர்வ பரிபூரண அகண்ட ஒப்பற்ற தனித்த ஒன்று. இதுதான் **மனிதனது உண்மை சுவரூபம்**.

இவ்வித ஆத்ம ஞானத்தால் என்ன பிரயோசனம்? இதனால் விளையும் பயன்யாது? இக்காலங்களில் பிரயோசனம் அல்லது வருமானத்தை முன்னிட்டு ஒவ்வொன்றை அபிமானிக்கிறோம். இது எத்தனை விராகன் லாபத்தை கொடுக்க வல்லது அது எத்தனை ரூபாய், அணு, தரத்தக்கது? என்று கணக்குப் பார்க்கிறோம். சத்தியப் பொருளாகிய ஆத்மாவை, பணத்துடன் ஒப்பிட்டுப் பேச நமக்கென்ன நியாயம் இருக்கிறது! ஆத்ம ஞானத்தால் யாதொரு பிரயோசனமும் இல்லா விட்டால் அதனது ஸத்திய ஸ்வரூபத்திற்கு யாதேனும் குறைவு வருமோ? லாப நஷ்டத்தைக் கொண்டு உண்மை நித்திய வஸ்துவாகிய ஆத்மாவை சோதிக்கலா காது. எப்படி இருந்த போதிலும் இவ்வாத்ம ஞானத்தால் எல்லாப் பிரயோசனங்க ளைக் காட்டிலும் மேலான பிரயோசனம் நமக்கிருக்கிறது. ஒவ்வொருவரும் சுகத் தைத்தேடி அலைகிறதை நாம் பார்க்கிறோம். பெரும்பாலோர் சுகத்தை பொய்யான, நிலை இல்லா வஸ்துக்களில் தேடுகிறார்கள். இந்திரிய வஸ்துக்களில் சுகத்தை எக்காலத்திலும் கண்டதில்லை. இந்திரியங்களிலாவது விஷய போகத்திலாவது சுகத்தைக் கண்டவன் ஒருவனுமில்லை. ஆத்மாவினிடத்தில்தான் இன்பம் அனுபவிக் கப்படுகிறது. ஆகையால் **சுகம் அல்லது இன்பம் ஆத்மா அல்லது உண்மை மனிதனி டத்துள்ளது** என்று தெரிந்து கொள்வதே ஆத்மஞானத்தால் மனித வர்க்கத்தார் அடையக்கூடிய சர்வோத்தமமான பலன்.

இதற்கடுத்த இன்னுமோர் விசேஷமாவது அறியாமை என்கிற அஞ்ஞானமே எல்லா விதத். துன்பங்களுக்கும் தாயாக இருக்கிறது. பரிபூரண ஆத்ம ஸ்வரூபன் தனக்கது வேண்டும் இதுவேண்டுமென்று துக்கித்தழுவது எத்தகைய அறியாமைக் கும் மூலகாரணம். சாதலில்லா நித்திய பரிசுத்த பரிபூரண ஆத்மாவாகிய நாம் அல்ப சிறிய தேக மனோபிம்பங்களென்று நினைப்பதே எல்லா வித அறியாமைக்கும் பிறப்பிடம். யாதொரு பரோபகாரமுமில்லா சுயப்பிரயோசன கர்மங்களுக்கெல்லாம் இது புகலிடம். என்னை நான் ஓர் சிறு தேகமாக நினைத்த மாத்திரத்தில் அன்னிய தேககஷ்ட நஷ்டத்தால் என்னுடைய தேகத்தை செவ்வையாக வைத்து ஊட்டி வளர்க்க இச்சிக்கிறேன். அப்போது நீ வேறு; நான் வேறாகிறேன். இவ்வித வேற்றுமை ஞானம் ஜனித்தவுடனே அது எல்லாவித துர்நடத்தைகளுக்கும் வழி உண்டாக்கி மனிதனை பலவித சஞ்சலத்திற்குட்படுத்துகிறது. இன்றைக்கு உயிருடனிருக்கும் ஆண் பெண் உள்பட மனிதர்களில் சிலரேனும் சுயப்பிரயோசனத்தை கனவிலும் கூட கருதாமல் பரோபகாரமான காரியங்களைச் செய்யட்டும்! நாளைக்கே இப்பூமி வைகுண்டம் சிவலோகம் அல்லது மோக்ஷஸ்தானமாக மாறிவிடும் என்பதில் கிஞ்சித்தும் சம்சயமில்லை.

ஆனால் யந்திர தந்திர பூதபௌத்திகாபிவிருத்தியால் மாத்திரம் தானே ஒருக் காலத்திலும் இப்பலன் பிராப்தமாகாது. எரிகிற நெருப்பில் எண்ணையை விட்டால் மேலுக்கு மேல் தீ அதிகமாவதுபோல, லோகாயத ஞானத்தால் அதாவது விஷய இந்திரிய போக ஜடப்பொருள்களின் ஞானத்தால் துன்பம் அதிகமாக வளர்கிறது. ஆத்மஞானமில்லாத உலகஞானச் செயல்களெல்லாம் எரிகிற கொள்ளியை ஏறத் தள்ளுவது போன்றதும், வேண்டியபோது தன்னுயிரை மற்றவர்களுடைய க்ஷேமத் தின் பொருட்டு வினியோகிப்பதை விட்டு இதராளுடைய சொத்தை அபகரிக்கவும். ஜீவ ஹிம்சை செய்து மற்றப் பிராணிகளைக் கொன்று சாப்பிடவும், பரோபகாரம் ஈவு இரக்கமற்ற கல் நெஞ்சர் கையில் இருக்கிறது போதாமல் இன்னுமொரு மந்திர வாளை கொடுப்பது போலுமாம்.

இவ்வித பரோபகார ஆத்மார்த்த நீதிகளை அனுபவத்திற்குக் கொண்டுவர முடியுமா? என்பது இனியொரு கேள்வி. தற்காலத்தவர்களால் இதை சருவ சாதாரணமாக கையாள முடியுமா? பூர்வீகர்களுக்காவது இக்காலத்தவர்களுக்காவது வேறெந்த ஜாதி ஜனக் கூட்டத்தாருக்காவது நித்திய சத்திய வஸ்துவாகிய ஆத்மா வணங்கி நிற்காது. எஜ்ஜாதி, எஜ்ஜன, எச்சபையாரும் சத்திய நித்திய ஆத்மாவிற்கு வணங்கி பிழைத்திருக்க வேண்டும். இல்லாவிட்டால் சாகவேண்டியதுதான். ஜாதி மத சபைகளெல்லாம் ஆத்மாவென்னும் அஸ்திவாரத்தின் மேல் கட்டி ஆத்மஸ்வ ரூபமாக விளங்கச் செய்யவேண்டும். அவரவரிஷ்டப்படி ஏற்படுத்தப்படும் ஜாதி மத ஸபைகளுடன் சத்திய நித்தியப் பொருளாகிய ஆத்மா பொருந்தி நிற்காது. இத்தகைய சிறப்பையுடைய ஆத்மார்த்த பரோபகார தர்மத்தை எந்த ஜனக்கூட்டத் தில் அனுஷ்டிக்க முடியாதோ அந்த ஜன சங்கத்தைவிட்டு காட்டிற்கேகி பிழைப்பது மேலானது. அப்படிச் செய்கிறவன்தான் தைரியசாலி. தைரியம் அல்லது ஆண்மைத் தனம் இருவிதமானது. பிரயோகிக்கப்பட்ட பீரங்கியின் முன் பயந்தோடாமல் நிற்பது ஒன்று. ஆத்ம ஸ்வரூபத்தை ப்ரத்தியக்ஷமாக அனுபவித்து எந்நிலையிலும் சலிக்காமல் ஆத்மஸ்வரூபராக பிரகாசிக்கும் நிர்ப்பய நிலை மற்றொன்று. பரதகண்டத் தின்மேல் படை எடுத்துவந்த ஓர் அரசனிடம் இப்புண்ணிய பூமியிலுள்ள சாது சன்னியாசிகளைக் கண்டு தரிசிக்கும்படி அவனது போதகாசிரியர் சொல்லியிருந்தார். அவ்வரசன் ஓர் துறவியைப் பார்க்க வெகுகாலம் தேடி, ஒரு கற்பாறையின்மேல் உட்கார்ந்திருந்து அதிக வயதுசென்ற ஓர் விருத்தாப்பியரைக் கண்டான். அச்சக்கிர வர்த்தி கொஞ்சநேரம் அந்த சன்னியாசியுடன் சம்பாஷித்ததில் அப்பெரியவருடைய ஞானோபதேசங்கள் அரசனது மனதில் ஊன்றிப் பதிந்து அதை இளகச் செய்யவே, அம் முனீசுவரரை தன்னோடு தன் தேசத்திற்கு வரும்படி அரசன் அழைத்தான். அதற்கு சன்னியாசி ஐயா! நான் இவ்விடத்தில் இக்காட்டில் பூரண திருப்திகரமாக வும், மன நிம்மதியாகவும் காலங் கழித்து வருகிறேன். நான் தங்களுடன் வர முடியாதென்றார். நான் இவ்வுலகத்து ஏகசக்கிராதிபதி; தாங்கள் என் ராஜதானிக்கு வருவீர்களானால் தங்களுக்கு பணம், அதிகாரம், சம்பத்துக்களைத் தருவேன் என்றான். அவைகளால் தனக்காக வேண்டிய தொன்றுமில்லை; தானும் வரமுடியாதென்று துறவி பதிலளித்தார். நீர் எழுந்து என்னுடன் வராவிட்டால் இதோ என்னுடைய வாளுக்கிரையாக்குவேனென்று அரசன் பயமுறுத்தினான். ஹே பூபதி! நீ இதுவரை யில் இவ்வித பைத்தியக்காரத்தனமாக பேசியது கிடையாது. என்னைக்கொல்ல

உன்னல் முடியுமா? என்ஜன வெய்யில் உலர்த்தாது, என்ஜன நெருப்பு சுடாது. என்ஜன கத்தி வெட்டாது. ஏனென்றுல் நான் பிறப்பற்றவன். இறப்பில்லாதவன். நித்தியன். எப்போது முள்ளவன். சர்வ வல்லமையுள்ள எங்கும் நிறைந்த ஆத்மா நான் என்று சாந்த ஸ்வரூபத்துடன் புன்னகையு முடையவராய் துறவி பதிலளித்தார். இவ்வித தைரியம் ஆத்ம ஞானத்தியது. மற்றையது புலி சிங்கத்திய தைரியத்தைப் போன்ற மிருகத்தன்மையது. 1857 - ம் வருஷத்தில் இந்தியாவில் கலகம் நடந்தபோது அவ்விடத்தில் ஓர் சாது இருந்தார். அவர் ஓர் மஹான்; மஹம்மதிய கலகக்கார ஞெருவன் அந்தச் சாதுவை உயிர்ச்சேதம் நேரும்படியாக குத்திவிட்டான். அக்கலகக்காரர்களில் ஹிந்துக்களா யிருந்தவர்கள் சிலர் அத்துலுக்கஜனப் பிடித்து வந்து அச்சாதுவின் முன் நிறுத்தி அவஜனக் கொன்றுவிட உத்திரவு கேட்டார்கள். சுவாமிகள் அவஜன சாந்தமாய் ஏறெடுத்துப் பார்த்து நீ அவனுகிய ஆத்மா, நீயும் அவனுகிய ஆத்மா என்று சொல்லிய வண்ணமாகவே பிராணஜன விட்டார். ஆத்ம ஞானத்தின் பெருமையை எடுத்துக் காட்டவந்த இது ஓர் திருஷ்டாந்தம்.

உங்களுடைய இனத்தவர்களில் ஆத்மஞான தத்துவங்கஜள பொருந்தச் செய்து அவ்வாத்மார்த்த நீதிகஜள அவர்கள் மூலமாக பிரகாசிக்கச் செய்ய உங்களால் முடியாவிட்டால், நீங்கள் எவ்விதமாக அணிவகுத்து நின்றுல் அதிசிரேஷ்டமான ஆத்ம ஞானம் தங்கி நிஜலத்து விளங்கவல்லதோ அம்மாதிரியாக உங்களுடைய ஜன சமூஹங்கஜள உருவகப்படுத்திக் கொள்ள உங்களால் முடியாவிட்டால், உங்களு டைய தேக, தசையின் வலுவைப்பற்றியும் உங்கள் நாட்டு நிலயங்கள், சங்கங்கள், கல்விச்சாஜலகள் முதலியவைகஜளப் பற்றியும் சிறப்பித்து பேசுவதால் என்ன பிரயோசனம். நீங்கள் எழுந்து நின்று இவ்வித ஆத்மார்த்த நீதிகஜள அனுஷ்டிக்க முடியாது; இத்தகைய தைரியம் எங்களுக்கில்ஜல என்று சொல்வீர்களானுல் உங்களுடைய சிறப்பைப் பற்றி தற்புகழாக பேசிக்கொள்ளும் வார்த்தைகளால் யாது பலன் உண்டு. உங்களுக்கு ஆத்மார்த்த நீதிகஜள அனுஷ்டானத்திற்குக் கொண்டுவர முடியாதென்றுல், பவுன் ஷிலிங் பார்த்திங்குகஜள சம்பாதிப்பது மாத்திரம் சுலபமாக் கும்! அப்படியானுல் நீங்கள் உங்களுடைய இனத்தார் சந்ததியாரைப் பற்றி புகழ்ந்து பேசுவதேன்? எந்த ஜாதி, ஜன சமயத்தாரில் அதிக உத்தமமான பாரமார்த்திக ஆத்ம தர்மங்கள் பழக்கத்திலுள்ளனவோ அக்கூட்டத்தார்தான் உயர்ந்தவரிலும் உயர்ந்த வராவார். இது என்னுடைய அபிப்பிராயம். எந்த ஜாதி ஜன சமயத்தார்கள் மேலான உத்தம ஆத்மார்த்த தத்துவங்கஜள சுவீகரிக்க அசக்தர்களா யிருக்கிறுர்களோ அவர்கள் தங்கஜள சரிப்படுத்திக்கொள்ள வேண்டும். எவ்வளவுக்கெவ்வளவு துரித மாக தங்கஜள திருத்திக் கொள்ளுகிறுர்களோ அவ்வளவுக்கவ்வளவு நல்லதாகும். ஆண்மக்களும் பெண்மக்களும் பயப்படாமல் தைரியமாக எழுந்திருங்கள். சத்தியத் தை நம்பிகைப்பற்றி அனுஷ்டியுங்கள். அதை உங்களில் சர்வசாதாரணமாக கையாளும் பழக்கப்பொருளாக்கி விடுங்கள். இத்தகைய தைரியசாலிகளான ஆண் மக்கஜளயும் பெண்மக்கஜளயும் இவ்வுலகம் வேண்டி நிற்கிறது. எந்த தீரத்வம் மனிதன் உண்மையை அறியவும் அதை அனுஷ்டானத்திற்குக் கொண்டுவரவும் இயமஜனக்கண்டு நடுங்காமல் அவஜன எதிர்கொண்டழைக்கவும், தான் ஆத்மாவென் றறியவும், இப்பிரபஞ்சத்தில் தன்ஜன எதனுலும் கொல்ல முடியாதென்று தெரிந்து கொள்ள தைரியமாக உங்கஜளத் தூண்டவும் வல்லதோ அத்தகைய தீரத்வத்தை

வழக்கத்தி லிருத்துங்கள். அப்போது நீங்கள் பந்தங்களினின்று விடுபட்ட சுதந்திர முக்தர்களாவீர்கள். உங்களுடைய நிஜஸ்வரூப ஆத்மாவை அறிவீர்கள். இந்த ஆத்மாவைப்பற்றி முதலில் சிரவணம் செய்யவேண்டும். அதாவது படித்தோ கேட்டோ தெரிந்து கொள்ளவேண்டும். பிறகு அதைப்பற்றி சிந்திக்க வேண்டும். அப்பால் தியானம் செய்யவேண்டும். இக்காலத்தில் வேலை தொழில் கர்மம் கர்மம் என்று அளவுக்கு மிஞ்சி அதிக சிலாக்கியமாக பேசுவதும், சற்று வேலையைவிட்டு விலகி யோசிக்கும் தொழிலை இழிவாக சொல்வதும் சர்வசாதாரணமாய் விட்டது. தொழிலில் பிரவிருத்தித் துள்ளது நல்லதுதான். ஆனால், காரியமாகிய வேலை காரணமாகிய நினைப்பிலிருந் துண்டாகிறது. நினைவு அல்லது மனோசக்தி கரணங்கள் மூலமாக தசைகளாகிய கருவிகளைச் சற்று அசைத்தலால் உண்டாகும் சலனம் எதுவுண்டோ அதற்கு தொழில், வேலை அல்லது கர்மம் என்று பெயர். நினைவு அல்லது எண்ணம் இல்லாவிட்டால் காரியம் அல்லது வேலை யில்லை. ஆதலால் மூளையை, அல்லது மனதை உயர்ந்த அத்தியந்த கம்பீரமான பாரமார்த்திக ஆத்மார்த்த எண்ணங்ணங்களால் நிரப்புங்கள். இரவும் பகலும் அவ்வெண்ணங்களை உங்கள்முன் கொண்டுவந்து நிறுத்தி சிந்தியுங்கள். அதிலிருந்து அபார அற்புத காரியங்களெல்லாம் வெளிவரும். அசுத்தத்தைப்பற்றி அடியோடே மறந்துவிடுங்கள். நாம் பரிசுத்தர்களென்று சதா பேசவேண்டும். நாம் சின்னம் சிறு பிராணிகளென்றும், பிறந்திருக்கிறதாகவும், சாகப் போகிறதாகவும் நினைத்து மயங்கி பொய்த்தூக்கம் தூங்கிக் கொண்டிருப்பதோடு அடிக்கடி பயத்தால் மிரண்டு திகிலடைந்து கலங்குகிறோம்.

ஓர் சிங்கத்தைப் பற்றிய கதை ஒன்றுண்டு. ஒரு பெண் சிங்கம் பூரண கர்ப்பமாக இருந்தது. ஆகாரத்தைத் தேடி போய்க்கொண்டிருக்கையில் ஓர் ஆட்டு மந்தையைப் பார்த்து அதன்மேல் பாய்ந்தது. பாய்ந்த வேகத்தால் கர்ப்பங் கலங்கி வயிற்றிலிருந்த குட்டி வெளிப்பட்டவுடனே தாய்ச்சிங்கம் செத்துப்போய் விட்டது. ஆடுகள் அச்சிங்கக் குட்டியை பாதுகாத்து வளர்த்து வந்தது. ஆடுகளோடு இதுவும் புல்லை மேய்ந்து ஆடுகளைப்போலவே கத்தும். காலக்கிரமத்தில் நன்றாய் வளர்ந்து பூரண பருவமடைந்து சிங்கத்தின் உரு குலையாமலிருந்த போதிலும் அது தன்னை ஓர் ஆடாகவே நினைத்திருந்தது. ஓர் தினத்தில் இன்னுமோர் சிங்கம் இரைதேடிக் கொண்டு வந்தது. ஆட்டுமந்தையில் ஆடுகளோடு தன்னைப்போன்ற சிங்கமொன்று தன்னைக்கண்டு பயந்து ஆடுகளோடு தானுமொரு ஆடாக ஓடுவதைப் பார்த்து ஆச்சரியப்பட்டது. ஆடாக நினைத்துள்ள சிங்கத்தினிடம் மெய்ச்சிங்கம் போய் நீ ஆடல்ல சிங்கமென்று சொல்ல முயன்றது. இது கிட்டநெருங்க அது பயந்தோடிற்று. ஆனாலும் நிஜ சிங்கம் சமயத்தைப் பார்த்துக்கொண்டிருந்தது. ஒரு நாள் ஆட்டுச் சிங்கம் தூங்கிக்கொண்டிருக்கையில் கிட்டப்போய் பிடித்துக்கொண்டு நீ ஆடல்ல, சிங்கமென்று போதித்தது. இல்லை நான் ஆடுதான் என்று பதில் சொல்லிற்று. மெய்ச் சிங்கம் சொல்வதை நம்பாமல் நான் ஆடே என்று கத்தியும் காட்டிற்று. சிங்கம் அதனை ஓர் ஏரி யண்டைக்கு இழுத்துக் கொண்டுபோய் இத்தண்ணீரில் தெரியும் உன்னுடைய முக பிம்பத்தை என்னுடைய முக பிம்பத்துடன் ஒத்திட்டுப்பார் என்றது. தன்னை ஆடாக நினைத்துள்ள சிங்கம் முதலில் உபகாரார்த்தமாக தன்னைக் காப்பாற்ற வந்துள்ள சிங்கத்தின் ரூபத்தையும் பிறகு தன்னுடைய சாயலையும்

உற்றுப்பார்த்து உடனே தனக்குத் தானே அதைப்போன்ற உண்மைச் சிங்கமென்ற ஞானம் உதயமாயிற்று. அப்போதே சிங்கத்தைப்போல் கர்ஜித்தது. இதன் முன்பாக ஆட்டின் கூச்சல் இருந்த இடம் தெரியாமல் ஓடிப்போய்விட்டது. அதைப்போல் நீங்களெல்லாரும். சிம்ஹங்கள். பரிசுத்த அகண்ட எல்லை இல்லா பரிபூரண ஆத்மாக்கள். ஸர்வ சக்தியும் பராக்கிரமமும் உங்களிடத்துள்ளது. அன்பனே! நீ ஏன் அழுகிறாய்? உனக்கு பிறப்புமில்லை. இறப்பும் கிடையாது. நீ ஏன் துக்கிக்கிறாய்? உனக்கு வியாதியுமில்லை. துன்பமுமில்லை. நீ எல்லையற்ற அகண்ட ஆகாயம் போலி ருக்கிறாய். பலவித வர்ணத்துடன் கூடிய மேகங்கள் அதன் முன் தோன்றி சற்றுநேரம் அங்கு மிங்கும் ஓடி ஆடி விளையாடிவிட்டு மறைந்துபோகின்றன. ஆனால் ஆகாயம் மாத்திரம் தன் நிறம் மாறாமல் எப்போதும் போல நீலவர்ணத்துடனே இருக்கிறது, நாம் ஏன் தீச்செயல்களைக்காண்கிறோம்? இருட்டில் பெரிய மரத்தூண் ஒன்று இருந்தது. அப்பக்கமாக வந்த திருடனுக்கு அக்கட்டை ஊர்காவற்காரனாக தென் பட்டது. தன் ஆசைக் காதலியைக் காண எதிர்ப்பார்த்திருந்த ஓர் வாலிபன் அக்கொ ம்பை தன் மனோரஞ்சித பெண்மணி என்று நினைத்தான். பேய் பிசாசுகளின் கதைகளைக் கேட்டிருந்த ஓர்குழந்தை அக்கட்டையை பூதமென்று நினைத்து பயந்து வீறிட்டழுதது. ஆனால் எப்போதும் எல்லாருக்கும் பொதுவாக அங்குள்ளது வாஸ்த வத்தில் மரத்தூண் தானே?

நாம் எப்படி இருக்கிறோமோ அப்படியே உலகத்தைப் பார்க்கிறோம். ஓர் அறையில் பொன்னிறைந்த மூட்டையொன்று மேஜையின்மேல் வைத்திருப்பதாயும் அதே அறையில் ஓர் குழந்தையும் இருப்பதாகவும் நினைத்துக் கொள்வோம். ஓர் திருடன் வந்து அப்பொன் பையை திருடிக்கொண்டு போகிறான். குழந்தைக்கு கள்ளனுடைய வியவகாரம் தெரியுமா? நம்முள்ளத்தில் எது இருக்கிறதோ அதையே நாம் வெளியிலும் பார்க்கிறோம். குழந்தையின் உள்ளத்தில் திருடனில்லை. ஆகவே வெளியிலும் அதற்குத் திருடன் தென்படுகிறதில்லை. நம்முடைய ஞானமெல்லாம் இவ்வாறாகவே யிருக்கின்றன உலகத்திய துர் நடத்தைகளைப் பற்றியும் பாபச் செயல்களைப் பற்றியும் பேசாதே இன்னும் துர் நடத்தைகளை பார்க்கவேண்டி யிருக்கிறதே என்று வியசனப்பட்டு அழு. எங்கும் பாப காரியங்களை இன்னும்கூட பார்க்கவேண்டி யிருக்கிறதே யென்று நொந்து கசிந்துருகு. நீ உலகத்துக்கு உபகாரம் செய்யவேண்டுமானால் அதை நிந்திக்காதே. கண்டிக்காதே. குற்றங்கூறாதே. மேலு மேலும் அதை பலஹீனப்படுத்தாதே. பாபமென்ப தென்ன? துன்பமென்ப தென்ன? இவைகளைப்போன்ற மற்றவெல்லா மெங்கிருந்து வரும்? பலஹீனத்தால் விளைந்த காரியங்களேயாகும். இவ்விதபோதனைகளால் உலகத்தை நாளுக்குநாள் க்ஷணகதிக் குக் கொண்டுவந்து விடுகிறீர்கள். பாபிகளென்றும் பலஹீனர்களென்றும் சிறு வயதிலிருந்தே மனிதர்கள் போதிக்கப்பட்டிருக்கிறார்கள். மகா மகிமை பொருந்திய அழிவில்லா ஆத்மாவினருட் குழந்தைகள் நீங்கள் என்று ஜனங்களுக் குபதேசியுங் கள். மிகவும் மெலிந்து தாழ்ந்த ஸ்திதியிலுள்ளவர்களுக்கும் கூட இவ்விதோபதேசத் தையே செய்யுங்கள். குழந்தைப் பருவத்திலிருந்தே சத்திய, ஸ்திர, தைரிய, பரோப காரார்த்தமான எண்ணங்களாலாகும் ஸம்ஸ்காரங்களையே அவர்களுடைய மனதிலும் மூளையிலும் பதியச் செய்யுங்கள். இவ்வித உபதேச வார்த்தைகளுக்கு செவிகொடுங்கள். துர்ப்பலத்தை உண்டாக்கத் தக்கனவும் பயத்தால் கைகாலாடாமல்

திமிர் வியாதிஸ்தனைப்போலாக்க வல்லனவுமான சொற்களுக்கு செவி கொடாதீர் கள். "சிவோஹம், சிவோஹம்," "நான் அது," "நான் அவன்" "நான் ஆத்மா. நான் சிவம்" என்று என்று சதா உங்களுக்கு. நீங்களே சொல்லிக்கொண்டிருங்கள், இவ்வுபதேச மஹாவாக்கியம் சதா இரவும் பகலும் உங்கள் மனதிற் கோர் பாடமாகி விடட்டும். சாகும்போதுகூட, இத்தேகத்தை விட்டு பிரியும்போதுகூட, இயமன் கையிலகப்பட்டி ருக்கும் போதுகூட, இதையே வசனியுங்கள். நான் நாசமிலா பிறப்பிறப்பற்ற நித்திய, சத்திய, அகண்ட ஆத்மாவென்று அறியச் செய்யுங்கள். இதுதான் ஸத்தியம். இதுதான் யதார்த்தம். இதுதான் உண்மை. இவ்வையகத்தின் அபார அகண்டசக்தி உன்னுடையதாக இருக்கிறது. உங்கள் மனதில் நுழைந்து உங்கள் ஸ்வரூபத்தை மறைத்துள்ள அஞ்ஞான அந்தகாரத்தை ஓட்டிவிடுங்கள். நாம் தைரியசாலிகளாக இருப்போமாக. உண்மையை அறிந்து அந்தப்படி அனுஷ்டியுங்கள். நீங்கள் உண்மை க்கு, முடிவாக அடையப்படுவதாகிய பரம புருஷார்த்த பரமாத்மாவிற்கு வெகுதூரத் திலிருக்கலாம். ஆனுலும் உண்மை ஞானத்தில் விழிப்புடையவராய் எழுந்து முடிவா கிய உண்மை ஆன்ம தத்துவத்தை அடையும்வரை பின் வாங்காமல் விடாமுயற்சி யுடன் வேலை செய்யுங்கள். ஐயமடைவீர்கள். பரிபூரண ஆன்மசித்தியைப் பெற்று ஜீவன் முக்தர்களாக பிரகாசிப்பீர்கள்.

**ஓம் தத் ஸத் சுபம்.**

---

கீழ்வரும் சுருதி வசனங்கள் மனிதனது உண்மை ஸ்வரூபமாகிய ஆத்மா நித்திய சத்திய ஞான ஆனந்த அகண்ட எல்லையில்லா எல்லாம் வல்ல எல்லா வற்றையும் அறியும் ஒப்பற்ற தனிப்பொருளென்றும், ஆத்மாவைத் தவிர்த்த மற்ற வைகளெல்லாம் அதனில் மயக்கத்தால் விளைந்த நிலையில்லா அசத்தியப் பொருளெ ன்றும், ஆத்மாவை ஓர் எல்லைக்குட்படுத்தி பரிச்சின்ன ஜீவனுக பார்ப்பது அஞ்ஞான த்தால் வந்ததென்றும், இவ்வித அஞ்ஞான காரியம் பயத்திற்கும் பிறப்பு இறப்பிற்கும் துக்கத்திற்கும் காரணமென்றும், தன்னை அல்லது ஆத்மாவை மறைத்த அஞ்ஞான மயக்க அவித்தையையும் அதனுல் விளைந்த கணக்கில்லா நாம ரூப ஜீவ பிரபஞ்சங் களையும் நீக்கி, நின்ற ஆத்மாவின் சாக்ஷாத்காரம் பெற்று மீண்டும் தோன்றும் லோக ஜீவ பேதங்களனைத்தையும் தன் ஆத்ம ஸ்வரூபமாக பார்க்கும் ஞானத்தால் தைரியமும் பிறப்பிறப்பு ஸர்வபந்த நிவிருத்தியாகிய மோக்ஷமு மடையப்படும் என்று தெரிவிக்கின்றன.

## ஈசாவாசியோபநிஷத்.

1. எவன் சர்வ பூதங்களையும் தன்னுத்மாவாகவே பார்க்கிறுனே, எந்த ஞானிக்கு சகலபூதங்களும் தானுகவே எப்போ தாய்விட்டதோ, அப்போதே சகலத்தையும் ஒன்றுய்ப்பார்க்கிற அவனுக்கு மோகமேது? சோகமேது?

## முண்டகோபநிஷத்.

2. ஓ! சௌமியா! அது சத்தியமானது. எரிந்து கொண்டிருக்கிற அக்கினியிலிருந்து அதேரூபமாய் அநேக பொறிகள் எப்படி யுண்டாகின்றனவோ, அப்படி அக்ஷரத்திலிருந்து பலவித தேகத்தை உபாதியாயுடைய ஜீவர்கள்ளுண்டாகிருர்கள். அதினிடத்திலேயே லயமடைகிருர்கள்.

3. பெருகிக் கொண்டிருக்கிற நதிகள் நாமரூபங்களை விட்டு சமுத்திரத்தை யடைந்து எப்படி அதில் லயித்துப் போகின்றனவோ, அப்படிப் பிரம்ம ஞானியானவன் நாம ரூபங்களிலிருந்து விடுபட்டு சர்வ சிரேஷ்டமாயும் திவ்வியமாயு மிருக்கிற புருஷனையடைகிருன். எவன் இப்படி ஆத்மாவை யறிகிருனே அவன் ஆத்மாவே யாகிருன்.

## மாண்டுக்கியோபநிஷத்.

4. இதெல்லாம் பிரம்மம்தான். ஜாக்கிர சுவப்ன சுஷுப்தி துரியமாகிற நான்கு அவஸ்தைகளை யுடைய இந்த ஜீவாத்மாவும் பிரஹ்மம்தான்.

5. ஆகாசமானது கடாகாசங்களாக சொல்லப்படுவதுபோல ஆத்மாவானவன் ஜீவர்களாக சொல்லப்படுகிருன். மண்ணிலிருந்து கடம் முதலியவைகள் உண்டாகிறது போல ஆத்மாவே பிருதிவி முதலிய கூட்டங்களாயுண்டாகிருன். கடம் முதலியவை நசித்தால் அவைகளிலுள்ள ஆகாசம் எப்படி மஹாகாசத்தில் லயமடைகிறதோ அதுபோல ஜீவன் ஆத்மாவில் லயமடைகிருன்.

6. ஜீவனும் ஆத்மாவும் பேதமற்ற தென்கிற வேற்றுமை இன்மை ஸ்துதிக்கத் தக்கது. வேற்றுமையாகிற பல வென்பது நிந்திக்கப்படுகிறது. அது சரியானதுதான்.

7. யாதொரு சராசரப் பிரபஞ்சமாகிற இந்த துவிதமானது மனத்தோற்றமோ, மனே நாசமானல் துவைதம் விளங்குகிறதில்லை.

## சாந்தோக்யோபநிஷத்.

8. ஓ! சௌமியா! ஒரே லோகக் கட்டியினுலே எல்லாம் லோகமாத்திரமே யென்றும், விகாரங்களும் பெயர்களும் பேச்சுமாத்திரமே யென்றும், லோகம் மாத்திரமே சத்தியமான தென்றும் அறிவதுபோல பிரம்மம் ஒன்றே சத்தியமானது மற்ற சேதனுசேதனப் பிரபஞ்சம் பேச்சு மாத்திரமே.

9. ஓ! சுவேதகேது! இந்த ஸகல பிரபஞ்சமும் அந்த ஸத்தையே ஆதாரமாக வுடையது. அதுதான் ஸத்தியமானது. அதுதான் ஆத்மா. அது நீயாயிருக்கிருய்.

## பிரகதாரண்ணியகோபநிஷத்.

10. சிருஷ்டிக்கு முந்தி இந்தப் பிரபஞ்சமானது பிரம்மமாகவே யிருந்தது. அது தன்ஊன பிரம்மமாகவே அறிந்தது. அதினிடத்தி லிருந்து இந்தப் பிரபஞ்சமெல்லா முண்டாச்சுது. அதை தேவதைகளிலும் ரிஷிகளிலும் மனிதர்களிலும் எவனெவ னறிந்தானே அவன் அதாகவே ஆய்விட்டான். இவ்வாத்மாவை அறிந்த வாமதேவ ரிஷி யானவர் "நான் மனுவானேன். சூரியனுனேன்" என்ருர். (சகலத்தையும் தன் ஆத்மாவாக பார்த்தாரென்பது கருத்து) இக்காலத்திலும் இப்படி நான் பிரம்மமா யிருக்கிறேனென்று எவன் அறிகிருனே அவன் இந்த சகலமுமாயாகிருன். அவனுக்கு விரோதஞ்செய்ய தேவதைகளும் சக்தர்களல்ல. ஏனென்றுல் அவர்களுக்கு அவன் ஆத்மாவாகிறதினுலே தான்.

## நாராயணுேபநிஷத்.

11. இந்தப் பிரபஞ்சம் முழுதும் நாராயணனே. களங்க மற்றவனுயும், தோஷ மற்றவனுயும், விகற்பமற்றவனுயும், பெயரற்றவனுயும், சுத்தனுயும், தேவனுயு மிருக்கிறவன் நாராயண ஞெருவன் தான். இரண்டாவ தொருவரு மில்ஊல. இப்படி எவனறிகிருனே அவன் விஷ்ணுவே யாகிருன். அவன் விஷ்ணுவேயாகிருன்.

## கைவல்லியோபநிஷத்.

12. சர்வ சுவரூபியாயும், இந்தப் பிரபஞ்சத்திற்கு முக்கிய விருப்பிடமாயும், சூக்ஷமத்தைக்காட்டிலும் சூக்ஷ்மமாயும் நித்தியமாயுமிருக்கிற பரப்பிரம்மமெதுவோ "அது நீ நீயே யது."

## அமிருதபிந்தூபநிஷத்.

13. அந்தப் பிரம்மமானது நிஷ்களமாயும் நிர்விகற்பமாயும் சாந்தமாயு மிருக்கி றது. அந்தப் பிரஹ்மம் "நான்" என்று அறிந்தால் பிரம்மமேயாகிருன் நிச்சயம். எந்தப் பிரம்மமானது நிர்விகற்பமோ, அநந்தமோ, காரணமும் உவமையு மற்றதோ, ஊஹிக்கத் தகாததோ, அநாதியோ அதை ஞானியானவ னறிந்து பந்தத்திலிருந்து விடுபடுகிருன்.

## நரசிம்மோத்தரதாபினி யுபநிஷத்.

14. தேகமற்றதாகிய ஆத்மாவே இந்த சகலப் பிரபஞ்சமும். ஆகையால், சர்வ சுவரூபியாயிருக்கிற சர்வர்த்மாவான ஆத்மாவைத் தேடவேண்டியது. இந்தப் பிரபஞ்ச மெல்லாம் ஸச்சிதானந்த பிரம்மசுவரூபமே.

15. இவன் சகலத்திற்கு மாத்மா. சகலமும் இவனே. இவனைவிட இரண்டாவதில்லை. விகற்பமற்ற ஆத்மா ஒருவனே. இவனைப்போல ஸத்தானவஸ்து வேறில்லை. ஸத்கனன். சித்கனன். ஆனந்தகனன் அவனே. இந்த ஆத்மாவானவன் ஏகரஸன். ஒருவனே. இந்த சகலப் பிரபஞ்சமும் சின்மயமே. ஆகையினாலே, பரமேசுவரன் ஒருவனே பிரபஞ்சமாகிறான். இதுதா னமிருதம். இதுதான் பயமற்றது. இது தான் பிரம்மம். அபயம் தான் பிரம்மம். பிரம்மமே அபயமாகிறதல்லவா? இப்படியறிந்தவன் ரஹஸியத்தை யறிந்தவனாயிருக்கிறான். இவன் தான் ஆத்மா. இவன் சகலத்தையும் தன் ஆத்மாவாக அறிகிறான்.

## மைத்திரேயோபநிஷத்.

16. தேகமானது தேவாலயமென்று சொல்லப்படுகிறது. அதிலிருக்கிற ஜீவனானவன் சிவனே. அஞ்ஞானமாகிற நிர்மாலியத்தைத் தள்ளி, "அவன் நான்" என்கிற பாவனையினாலே பூஜிக்கவேண்டியது. அபேதமாய்ப் பார்ப்பதுதான் ஞானம். மனது விஷயத்தை விட்டிருப்பதுதான் தியானம். சகல பாவனையையும் தள்ளி மிச்சமான தெதுவோ அதாக அந்த பிரம்மமாக ஆகக்கடவாய். பார்க்கிறவன், பார்வை, பார்க்கப்படுகிறவஸ்து இவைகளை வாசனையுடன் தள்ளிவிட்டு விளங்குகிற சிரேஷ்டமான ஆத்மாவையே பஜி.

## சர்வசாரோபநிஷத்.

17. ஆத்மா எவ்வித உபாதியு மற்றது. நிர்விசேஷ சின்மாத்திரம்; சத்தானது; இரண்டாவ தற்றது; ஆநந்தமானது மாயையற்றது. எதுவோ அதுதான் ஆத்மா அல்லது பிரம்மம்.

18. அநாத்துமாவுக்கு மூலமான தெதுவோ அது தான் மாயை. அவள் ஆகாசத்தில் மேகம் முதலியவை போல் பிரம்மத்தினிடத்தில் காணப்படுகிறாள். அந்த மாயையானவள் அநாதி முடிவையுடையவள். பிரமாணாப் பிரமாணங்களுக்குப் பொதுவானவள். இருக்கிறவளுமல்ல. இல்லாதவளுமல்ல. அவ்விரண்டுங் கலந்தவளுமல்ல. வாக்குக் கெட்டாதவள். பிரம்மமாகிய அதிஷ்டானத்திலேயே இல்லாதவள். வித்துவான்களினால் வர்ணிக்கப்படுகிற ஏற்றக் குறைச்சலான பேத வியவகாரங்களை யுடையவள். எவள் வாஸ்தவத்திலில்லையோ அவள் தான் மாயை. அவள் ஸ்வரூபம் அஞ்ஞானம். அவள் தான் மூலப்பிரகிருதி, குணசாமியம், அவித்தை இவைமுதலான அநேக ஆகாரமுள்ளவள். ஜகதாகாரமாய் பரிணமித்திருக்கிறவள். அந்த மாயையை இவ்விதமாய் பிரஹ்மஞானி அறிந்து அனுபவிக்கிறான்.

19. நான் தேகமுமல்ல. பத்திந்திரியங்களுமல்ல. புத்தி மனசு, ஈசனுமல்ல. அப்படியே அகங்காரமுமல்ல. பிராணனையுடையவனுமல்ல. மனதை யுடையவனுமல்ல. ஒளிபொருந்தியவன். நான் புத்தி முதலியவைகளுக்கு எப்போதும் சாக்ஷியாயிருப்பவன். நான் எக்காலத்திலும் நாசமில்லாதவன். சித்தாகவே யிருக்கிறவன் எப்போதும் மங்களகரமானவன். நான் கருத்தாவுமல்ல. போக்தாவுமல்ல பிரகிருதி

க்குச் சாக்ஷி சுவரூபமாகவே யிருப்பவன். என் சன்னிதி மாத்திரத்தாலே தேகாதிகள் ஜடமல்லாததவைபோல் காரியங்களை நடத்துகின்றன. ஸ்திரமாயும், நித்தியமாயும், எப்போதும் ஆநந்தமாயும், சுத்தமாயும், ஞான சுவரூபமாயும், அழுக்கற்றவனுயு மிருப்பவன். நான் சர்வ பூதங்களுக்கும் ஆத்மா. எங்கும் பரவியிருப்பவன். சாக்ஷி யாயிருப்பவன். இவைகளில் சந்தேகமில்லை. சகல வேதாந்தங்களினுலேயும் அறியத்தகுந்த பிரம்மம் நானே. அறியக்கூடிய ஆகாசம் வாயு முதலிய ரூபம் நானல்ல. நான் ரூபமல்ல, பெயருமல்ல; கருமமுமல்ல; சச்சிதானந்த ஸ்வரூபியான பிரம்மம் நானே. நான் தேகமல்ல. எனக்குப் பிறப்பேது? நான் அகங்காரமல்ல; ஆகையால் எனக்கு பசி தாகங்களேது? நான் மனதல்ல. ஆகையால், எனக்கு துக்க மோகங்களேது? நான் கருத்தாவல்ல. ஆகையால், எனக்குப் பந்த மோக்ஷங்களேது? என்று முனிகளுக்கு அதிருசியவாணி சொன்னுள். இந்த உபநிஷத் சத்தியமே.

## நிராலம்போபநிஷத்.

**20.** பிரம்ம சந்நிதி மாத்திரத்தினுலே பல விசித்திரமான ஜகந்நிர்மாண ஸாமர்த்தி யமுடைய புத்தி சுவரூபமாகிய பிரம்மத்தினுடைய சக்தியே பிரகிருதி.

**21.** இரண்டாவதற்றதாயும், எங்குந் தொடர்ச்சியாயுள்ளதாயும், சகல சுவரூபமாயு மிருக்கிற பிரம்மத்தினிடத்திலே தேவ, மிருக, நர, ஸ்தாவர, ஸ்திரீ, புருஷ, வருணு சிரம, பந்த, மோக்ஷ உபாதியாக விருக்கிற பல தேக பேதங்களினுலே கயிற்றில் பாம்பென்கிற பிரமைபோல் கற்பிதமா யிருக்கிற ஞானமே அஞ்ஞானம்.

## தேஜோபிந்தூபநிஷத்.

**22.** இந்த சகலப் பிரபஞ்சமும் பிரம்மமாத்திரமே. பிரம்மத்தைக் காட்டிலும் அன்னியமாய் அற்பமுமில்லை. எப்போதும் ஆநந்த சுவரூபமான அதுவே நான், நாசமற்ற பிரம்மம் "நானே."

**23.** நான் மூன்று தேகங்களுக்கும் அதிக்கிரமித்தவன். நான் சுத்த சைதன்னியமா யிருக்கிறேன். எவனுடைய அந்தக் கரணத்தில் "நானே பிரம்ம" மென்கிற பாவனையி ருக்கிறதோ அவன் ஜீவன் முக்தனென்று சொல்லப்படுகிறுன்.

**24.** ஆத்மாவுக் கன்னியமாய் ஜகத்தில்லை. ஆத்மாவுக்கன்னியமாய்ப் புகலிடமி ல்லை. ஆத்மாவுக் கன்னியமாய் சுகமுமில்லை. ஜகமெல்லாம் ஆத்மமயமாகவே யிருக்கிறது. எவ்விடத்திலும் ஆத்மாவுக் கன்னியமாய் ஒன்றுமில்லை. ஆத்மாவுக் கன்னியமாய் துரும்புகூட இல்லை. ஆத்மாவுக் கன்னியமாய் ஒரு உமியளவுமில்லை. ஜகத்தெல்லாம் ஆத்ம சுவரூபமாகவே யிருக்கிறது.

**25.** "நானே பிரம்மம்" என்று நிச்சயம் கொண்டு அகம் பாவத்தை விட்டுவிடு. அப்போது தூங்குகிறவன் கையிலிருக்கிற புஷ்பம் போல எல்லாம் லயத்தை யடைகிறது. பிறகு தேகமுமில்லை. கருமமுமில்லை. சகலமும் பிரம்மமாத்திரமே.

## நாரதபரி விராஜகேர்ப நிஷத்.

**26.** தனக் கன்னியமாயிருக்கிற சகலமும் கற்பிதமென்றும், நாசமடையத்தக்க தென்றும் அறிந்து விரக்தியை அடைந்த புருஷனுனவன் எப்போதும் "நானே ஆத்மா" என்று உச்சரிக்கவேண்டும். தனக் கன்னியமாய் யாதொன்றையும் அறியக் கூடாது. இப்படி வசிக்கிற ஜீவன் முக்தனுனவன் தான் செய்யவேண்டியதைச் செய்தவனுகி றுன். "நான்.ஆத்மாவல்ல" என்று வியவகரிக்கக் கூடாது. "நான் ஆத்மாவாக இருக்கி றேன்" என்று எப்போதும் விவகரிக்கவேண்டும்..

## திருசிகிப்பிராம்மஞேபநிஷத்.

**27.** ஓ சிரேஷ்டனே! சகலவஸ்துக்களிலேயும் உதாசீனபாவம் (பற்றற்றிருத்தல் அல்லது அலக்ஷியமா யிருத்தல்) உத்தமமான ஆஸனம். இந்த ஜகத்தெல்லாம் பொய் யென்கிற தெளிவான எண்ணம் பிராஞுயாமம். சித்தத்தை உள்ளுக்குள்ளே திருப்புகிறதுதான் பிரத்தியாகாரம். சித்தத்தினுடைய சலனமற்ற பாவம் தாரணமெ ன்று அறிகிருர்கள். சின்மாத்திரமாகிய ஆத்மாவே "நான்" என்று சிந்திப்பதுதான் தியானமென்று சொல்லப்படுகிறது. நான் சிரேஷ்டமான பிரம்மமென்றும், பிரம்மமே ஆத்மாவென்றும், ஆத்மாவே நானென்றும் இருக்கிற இருப்பெதுவோ அது சகல விருத்திகளுமற்றதாகிய சமாதி என்று அறிந்து கொள்.

## நிராலம்போபநிஷத்.

**20.** பிரம்ம சந்நிதி மாத்திரத்தினாலே பல விசித்திர மான ஜகந்நிர்மாண ஸாமர்த்தியமுடைய புத்தி சுவரூபமாக கிய பிரம்மத்தினுடைய சக்தியே பிரகிருதி.

**21.** இரண்டாவதற்றதாயும், எங்குந் தொடர்ச்சியா யுள்ளதாயும், சகல சுவரூபமாயு மிருக்கிற பிரம்மத்தினிடத்திலே தேவ, மிருக, நர, ஸ்தாவர, ஸ்திரீ, புருஷ, வருஞ சிரம, பந்த, மோக்ஷ உபாதியாக விருக்கிற பல தேக பேதங்களிஞலே கயிற்றில் பாம்பென்கிற பிரமைபோல் கற்பிதமா யிருக்கிற ஞானமே அஞ்ஞானம்.

## தேஜோபிந்துபநிஷத்.

**22.** இந்த சகலப் பிரபஞ்சமும் பிரம்மமாத்திரமே. பிரம்மத்தைக் காட்டிலும் அன்னியமாய் அற்பமுமில்ஐல. எப்போதும் ஆநந்த சுவரூபமான அதுவே நான். நாசமற்ற பிரம்மம் "நானே."

**23.** நான் மூன்று தேகங்களுக்கும் அதிக்கிரமித்தவன். நான் சுத்த சைதன்னிய மாயிருக்கிறேன். எவனுடைய அந்தக் கரணத்தில் "நானே பிரம்ம" மென்கிற பாவஐன யிருக்கிறதோ அவன் ஜீவன் முக்தனென்று சொல்லப்படுகிறுன்.

**24.** ஆத்மாவுக் கன்னியமாய் ஜகத்தில்லை. ஆத்மாவுக் கன்னியமாய்ப் புகலிட மில்லை. ஆத்மாவுக் கன்னியமாய் சுக முமில்லை. ஜகமெல்லாம் ஆத்மமயமாகவே யிருக்கிறது. எவ்விடத்திலும் ஆத்மாவுக் கன்னியமாய் ஒன்றுமில்லை. ஆத்மாவுக் கன்னியமாய் துரும்புகூட இல்லை. ஆத்மாவுக் கன்னியமாய் ஒரு உமியளவுமில்லை. ஜகத்தெல்லாம் ஆத்ம சுவரூபமாகவே யிருக்கிறது.

**25.** "நானே பிரம்மம்" என்று நிச்சயம் கொண்டு அகம் பாவத்தை விட்டுவிடு. அப்போது தூங்குகிறவன் கையிலிருக்கிற புஷ்பம் போல எல்லாம் லயத்தை யடைகிறது. பிறகு தேகமுமில்லை. கருமமுமில்லை. சகலமும் பிரம்மமாத்திரமே.

## நாரதபரி விராஜகோப நிஷத்.

**26.** தனக் கன்னியமாயிருக்கிற சகலமும் கற்பித மென்றும், நாசமடையத் தக்க தென்றும் அறிந்து விரக்தியை அடைந்த புருஷனைவன் எப்போதும் "நானே ஆத்மா" என்று உச்சரிக்கவேண்டும். தனக் கன்னியமாய் யாதொன்றையும் அறியக்கூடாது. இப்படி வசிக்கிற ஜீவன் முக்தனுனவன் தான் செய்யவேண்டியதைச் செய்தவனு கிருன். "நான்.ஆத்மாவல்ல" என்று விவகரிக்கக் கூடாது. "நான் ஆத்மாவாக இருக்கிறேன்" என்று எப்போதும் விவகரிக்க வேண்டும்.

## திருசிகிப்பிராம்மணோபநிஷத்.

**27.** ஓ சிரேஷ்டனே! சகலவஸ்துக்களிலேயும் உதாசீனபாவம் (பற்றற்றிருத்தல் அல்லது அலக்ஷியமா யிருத்தல்) உத்தமமான ஆஸனம். இந்த ஜகத்தெல்லாம் பொய் யென்கிற தெளிவான எண்ணம் பிராணுயாமம். சித்தத்தை உள்ளுக்குள்ளே திருப்புகிறதுதான் பிரத்தியாகாரம். சித்தத்தினுடைய சலனமற்ற பாவம் தாரணமெ ன்று அறிகிருர்கள். சின்மாத்திரமாகிய ஆத்மாவே "நான்" என்று சிந்திப்பதுதான் தியானமென்று சொல்லப்படுகிறது. நான் சிரேஷ்டமான பிரம்மமென்றும், பிரம்மமே ஆத்மாவென்றும், ஆத்மாவே நானென்றும் இருக்கிற இருப்பெதுவோ அது சகல விருத்திகளுமற்றதாகிய சமாதி என்று அறிந்து கொள்.

## மண்டலப்பிராம்மணுேபநிஷத்.

**28.** இந்தப் பிரபஞ்சமானது கற்பிதமானபடியினுலே தான் பிரபஞ்சத்தை விலக் கினபிறகு பேதமென்கிற திருக்கிறதில்லை. ஒருக்கால் மனது வெளியில் சென்ருலும் மனதிற்கு விஷயமாகிற வஸ்து மித்தை (பொய்) என்கிற நிச்சயத்தினுலே எப்போ தும் பிரகாசித்துக் கொண்டிருக்கிற சதாநந்தானுபவத்திலேயே முழுகியிருக்கிற பிரம்ம வித்தானவன் பிரம்மமேயாகிருன். பேதபாவனையைத் தள்ளிசுத்தமாகிய அத்துவைதப் பிரம்மம் "நான்" என்றிருக்கவேண்யது. பிரபஞ்ச வாசனை யற்றவனுய், சகலத்தையும் ஆத்மாவாக பார்க்கிறவனுய் அகங்காரத்தைத் தள்ளினவனுய் "நானே பிரம்ம" மென்று சிந்தித்துக்கொண்டு இந்தப் பிரபஞ்சமெல்லாம் ஆத்மாவென்று பாவிக்கிறவன் மோக்ஷமடைகிருன்.

**29.** நித்திய சுத்த பரமாத்மா "நானே" என்றும், தத்துவமஸி உபதேசத்திலுலே "நீயே நான்." "நானே நீ." என்றும், தாரக யோக மார்க்கத்திலுலே அகண்டாநந்த பூரணமாய் முக்தியடைகிறான்.

## ஸ்கந்தோபநிஷத்.

**30.** நான் ஞான சுவரூபியா யிருக்கிறதிலுல் பிறப்பற்றவனு யிருக்கிறேன். இதைவிட வேறே என்னவிருக்கிறது? ஆத்மாவுக் கன்னியமான ஜடவஸ்துக்க ளெல்லாம் சுவப்னம்போல நசித்துப்போகிறது. அவனே பரப்பிரம்மம். அந்தப் பிரம்மம் தான் நான். சமுசயமில்லை. ஜீவனே சிவன். சிவனே ஜீவன். அந்த ஜீவன் சிவனே தான். உமியிலுல் சூழப்பட்டிருக்கிற வரையில் நெல்லா யிருக்கிறது. உமியற்றதா லுலதுவே அரிசியாகிறது. அப்படித்தான் ஜீவனும் சூழப்பட்டிருக்கிறுன். கருமம் நாசமானுல் எப்போதும் சிவனுயிருக்கிறுன். கரும பாசத்திலுல் கட்டுப்பட்டிருக்கிற வரையில் ஜீவனுயிருக்கிறுன். பாசத்திலிருந்து விடுபட்டால் அப்போது சிவனுயிருக் கிறுன். தேக மென்பது தேவாலயமென்று சொல்லப்படுகிறது. ஜீவனுனவன் எப்போது மங்கள சுவரூபியான தேவனுகவே யிருக்கிறுன். அஞ்ஞானமாகிற மலினத்தைத் தள்ளி "சிவன் நான்" என்கிறபாவனையுடன் பூஜிக்கவேண்டியது. அபேதமாய் பார்க்கி றதே ஞானம். மனது விஷயத்தில் பற்றுமைதான் தியானம்.

## மஹாநாராயணேபநிஷத்

**31.** சகலமும் நீயே. சகலமும் நீயே. ஸகலமும் நீயே. நீயே மோக்ஷம். நீயே மோக்ஷத்தைக்கொடுக்கிறவன். சகல மோக்ஷஸ்தானமும் நீயே, உனக்கன்னியமாக ஒன்றுமில்லை. எதெது தோற்றப்படுகிறதோ அதெல்லாம் பொய்யாய்ப்போகிறதென்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது.

**32.** ஆதி நடு முடிவில்லாதது பிரஹ்மம். இந்த சகலப் பிரபஞ்சமும் பிரஹ்மமே. பிரஹ்மமானது ஸகுண நிர்க்குண சுவரூபமாயிருக்கிறது.

**33.** அவ்விடத்தில் வாஸ்தவமாக் குணாதீதனுயும் சுத்த சத்துவ சுவரூபியாயும் லீலையின் பொருட்டு அங்கீகரிக்கப்பட்ட நிரதிசயானந்த சுவரூபத்தையுடைய மாயோ பாதிகனுன நாராயண னிருக்கிறுன்.

**34.** சகலமான அவித்தியா பிரபஞ்ச மெல்லாம் சுருங்குகிறதும் விரிகிறதுமாயிரு க்கிற மகா மாயையின் விளையாட்டே. வாஸ்தவத்தில் யாதொன்றுமில்லை. ஏனென்றுல், லக்ஷண சூனியமான அநாதி மூலாவித்தையினுடைய விளையாட்டா கையிலுல் தான். அதெப்படி யெனில், இரண்டாவதற்ற ஒன்றுனதே பிரம்மம். அதனிடத்தில் பலவென்பது அற்பமாவதில்லை. ஆகையிலுலே பிரம்மத்திற் கன்னிய மான சகலமும் பொய்யானதே.

**35.** பிரம்ம சைதன்னியமானது அந்தக்கரணங்களில் பிரதிபலிக்கின்றது. பிரதிபிம் பங்களே ஜீவர்களென்று சொல்லப்படுகின்றன. சகல ஜீவர்களும் அந்தக்கரணத்தை உபாதியா யுடையவர்களே.

**36.** காரணகாரிய உபாதியினுலே ஜீவேசுவரபேதம் காணப்படுகின்றன. காரேணு பாதியுடையவன் ஈசுவரன். காரியோபாதியுடையவன் ஜீவன்.

**37.** நீ பிரம்மமா யிருக்கிறுய். நான் பிரம்மமா யிருக்கிறேன். நம்மிருவருக்குள் பேதமில்ஸ்ல. "நீயே நான். நானே நீ" இப்படிச் சொல்லி ஆதி நாராயணர் மறைந்தார்.

## அத்துவயதாரகோபநிஷத்.

**38.** ஜீவேசுவரர்கள் மாயா சுவரூபிகளென்றறிந்து சகல விசேஷத்தையும் இதல்ல, இதல்ல வென்கிறதாக விலக்கி எது மிஞ்சுகிறதோ அது அத்துவய பிரம்மம்.

## இராமரஹஸீயோபநிஷத்.

**39.** இராம மந்திரங்களுடைய ஆவர்த்தியைச் செய்கிறவன் இராமச்சந்திரனு கிறுன். வாஸ்தவமாகவே. "நான் ராமனுயிருக்கிறேன்" என்று எப்போதும் யார் சொல்லிக்கொண்டிருக்கிறுர்களோ அவர்கள் சம்சாரிகளல்ல வென்பது நிச்சயம். அவர்கள் ராமனே என்பதில் சந்தேகமில்ஸ்ல.

## இராமோத்தரதாபினியுபநிஷத்.

**40.** சிதாத்மகமான இராமச்சந்திர மென்கிற தெதுவுண்டோ அது சத்தாகிற பிரம்மம். "அவனே நான்" ஓம்,. அந்த ராமச்சந்திரனுனவன் பரம் ஜோதிரஸம் "நானே" என்று இந்தப்படி மனதினுலே ஆத்மாவை கிரகித்து பிரம்மத்துடன் சேர்க்க வேண்டியது. எவர்கள் உண்மையாய் "நானே ராமனுயிருக்கிறேன்" என்று எப்போதும் சொல்லுகிறுர்களோ அவர்கள் சம்சாரிகளல்ல வென்பது நிச்சயம். இராமனே. சந்தேகமில்ஸ்ல.

## சாண்டில்லியோபநிஷத்.

**41.** தியானமானது ஸகுண நிர்க்குண மென இரண்டு விதம். சகுணம் மூர்த்தித் தியானம். நிர்க்குணம் உண்மையான ஆத்ம சுவரூபத் தியானம்.

**42.** சமாதியாவது திரிபுடி (பார்க்கிறவன், பார்வை, பார்க்கப்படுகிறவஸ்து இந்த வேற்றுமை) யற்றதாயும், பரமானந்த சுவரூபமாயும் சுத்த சைதன்னியாத்து மகமாயு மிருக்கிற ஜீவாத்தும பரமாத்துமாக்களுடைய ஐக்யாவஸ்தைதான்.

## பைங்கலோபநிஷத்

43. "நானே" பரமாயும் சகலமாயுமிருக்கிறேனென்று பார்ப்பதுவே சிரேஷ்டமான சுகம். ஜலத்துடன் சேர்க்கப்பட்ட ஜலமும் பாலுடன் சேர்க்கப்பட்டபாலும், நெய்யுடன் சேர்க்கப்பட்ட நெய்யும் போல ஜீவாத்ம பரமாத்ம பேதமற்றதாகிறது. ஞானியானவன் எந்தெந்த விடத்தில் எவ்விதமாக மரணமடைந்தாலும் எங்கும் பரவிய ஆகாசம் போல் ஆத்மாவானவன் அந்தந்த விடத்திலேயே லயமடைகிறுன். வாஸ்தவமாய் கடாகாசம்போல் ஆத்மா லயமடைகிறதாக அறியத்தக்கது. அவன் நிராலம்பமாகிய ஞானப் பிரகாசத்தை எவ்விடத்திலுமடைகிறுன். "நானே பிரம்மம்" என்று எப்போது மிருக்கிறது மஹாத்துமாக்களுக்கு மோக்ஷ ஹேதுவாயிருக்கிறது. "நானே ஆத்மா" என்றறியாதவனுக்கு முக்தியுண்டாகிறதில்லை.

## மஹோபநிஷத்.

44. நான் ஸத் சித் பராநந்த பிரம்மமாகவே யிருக்கிறேன். வேறல்ல.

45. ஆத்ம ஞானியானவன் "நானே பிரஹ்ம" மென்றறிந்து சோகமற்றவனுகிறுன்.

46. திக்பிரமை நீங்கினவனுக்கு முன் தோற்றியபடி திக்குதோற்றுவது போல விஞ்ஞானத்தினுல் நாசமடைந்த ஜகத்தானது தோற்றிக் கொண்டிருந்தாலும் இல்ல வே இல்லை யென்று பாவனை செய்.

47. "நானே ஆத்மா" வென்றிருக்கு மிருப்பானது மகாத்துமாக்களுக்கு மோக்ஷ ஹேதுவா யிருக்கிறது.

48. ஈக்ஷணம் முதல் பிரவேசம் வரையில் சொல்லப்பட்டிருக்கிற சேதனுசேதனு த்மகமான ஜீவேசுவராதிரூபங்களாகிற சிருஷ்டிகள் ஈசுவரனுல் கற்பிக்கப்பட்டன. ஜாக்கிரம் முதல் மோக்ஷம் வரையிலுள்ள சம்சாரம் ஜீவனுலே கற்பிக்கப்பட்டன.

49. பாலை நிலத்தில் தோன்றும் ஜலம் முழுதும் பாலை நிலமே தவிர வேறில்லை. மூன்றுலகமும். சகலப் பிரபஞ்சமும் விசாரணையினுல் சின்மாத்திரந்தானே.

50. நானில்லாதவஸ்துவேயில்லை. தன்மயமன்றியுள்ள பதார்த்தமேயில்லை. சகலமும் ஸத் சித் மயமாக வியாபித்திருக்கிறது. நான் வேறெதை இச்சிக்கப் போகிறேன். இந்த சகலப் பிரபஞ்சமும் பிரம்மமே. விஸ்தாரமாயிருக்கிற இந்தப் பிரபஞ்சமெல்லாம் ஆத்மாவே. பாபமற்றவனே! நான் வேறே இந்தப் பிரபஞ்சம் வேறே என்ற பிராந்தியைத் தள்ளிவிடு.

## யோகசிகோபநிஷத்.

**51.** க்ஷேத்திரஞ்ஞன், பரமாத்துமா இவ்விருவருக்கும் எப்போது ஐக்கியமுண்டா கிறதோ, ஓ! பிராம்மஞேத்தமா! அந்த ஐக்ய மெப்போது. உறுதிப்படுகிறதோ அப்போது சித்தம் லயமடைகிறது. லயயோக முறுதிப்படுமாஞல், வாயுவானது அசைவற்றதாகிறது. சுவாத்மானந்த பரமபதமாகிய சுகமானது சித்த லயத்திஞலடை யப்படுகிறது.

**52.** சித்தம் சலித்துக் கொண்டிருக்கையில் சம்சார மென்றும், சித்தம் சலிக்காம லிருக்கையில் மோக்ஷ மென்றும் சொல்லப்படுகிறது. ஆகையால் சித்தத்தை சிரேஷ்டமான ஞானத்திஞல் பரமாத்மாவிடத்தில் ஸ்திரமாய் நிறுத்தவேண்டியது. சித்தமானது விஷயங்களுக்குக் காரணமாயிருக்கிறது. அது நசித்தால் ஜகத்தும் நசிக்கிறது. அதைப் பிரயத்தினத்திஞலே பரிசுத்தம் செய்யவேண்டியது.

## சந்நியாசோபநிஷத்.

**53.** நான் சின்மாத்திரமாக விருக்கிறேன். அறிய வேண்டிய தென்பதாகிய மலத்தைத் தள்ளி மனதுமுழுதும் நாசம் செய்து ஆசையாகிற பாசத்தை வெட்டி சிரேஷ்டமான சின்மாத்திரமாகவே நானிருக்கிறேன்.

## பரமஹம்ஸ்பரிவிராஜ கோபநிஷத்.

**54.** சச்சிதானந்த அத்துவய சிக்கன ஸம்பூர்ணுநந்தமாயும் ஒன்றுயும் ஞான சுவரூ பியாயு மிருக்கிற பிரம்மமே. "நான்" என்று எப்போதும் பிரம்மப்பிரணவானுசந் தானத்திஞல் எவன் கிருதகிருத்தியஞகிறுஞே, அவன் பரமஹம்ஸஞகிய பரிவிராட்

## அந்நபூர்ணோபநிஷத்.

**55.** அந்தப்பிரம்மமானது சகலபூதங்களுக்கும் ஆதாரமானது. பிரஞ்ஞான கனத்தை லக்ஷணமாக வுடையது. ஞானத்திஞ லறியத்தகுந்தது. சத்தியம், ஞானம், சுகம், அத்துவயம், ஏகம், இப்படிப்பட்ட ஆத்மாவே "நான்" என்று முனியானவன் மோக்ஷ மடைய வேண்டியது.

## அக்ஷியுபநிஷத்.

**56.** அவித்தையாகிற அந்தகாரத்தை அதிக்கிரமித்ததாயும், சகல தோற்றமு மற்றதாயும், அநந்தமாயும், நிர்மலமாயும், சுத்தமாயும், மஞேவாக்குக் கெட்டாத தாயும், ஞானக்கட்டியாயும், ஆநந்தமாயும் இருக்கிற ஆத்மா நாஞயிருக்கிறேன் என்று பாவஊன செய்யவேண்டியது.

## அத்தியாத்துமோபநிஷத்.

**57.** நான் சங்கமற்றவன். நான் சங்கமற்றவன். நான் அடையாளமில்லாதவன். நான் ஹரி. நான் சாந்தி அடைந்திருக்கிறவன். நான் நான் முடிவற்றவன். பூர்ணமான வன். பழமையானவன். நான் கருத்தாவல்ல. போக்தாவல்ல. நான் விகாரமற்றவன். நான் அழிவற்றவன். நான் சுத்தஞான சுவரூபி. நான் மாத்திரமுள்ளவன். எப்போதும் மங்கள் சுவரூபி.

## ஆத்மோபநிஷத்.

**58.** ஆத்மாவென்கிற பெயரையுடையவன். மங்களகரமானவன். சுத்தமானவன். எப்போது மிரண்டாவதற்ற ஒருவனே பிரம்ம ரூபத்தினுலே பிரம்ம மாத்திரமாய் விளங்கிக் கொண்டிருக்கிறுன். ஜகத்ரூபத்தினுலே விளங்குகிறதும் பிரம்மமே. வித்தை அவித்தை முதலிய பேதமாகவும், குரு சிஷியன் முதலிய பேதமாகவும் பிரம்மமே விளங்குகிறது. தத்துவ தரிசனத்தினுலே சுத்தப்பிரம்மமாத்திரமே விளங்குகிறது. வித்தையுமில்ல. அவித்தையுமில்ல. ஜகத்துமில்ல .மற்றென்று மில்ல. சத்தியம்போல் ஜகத் தோற்றுதல் சம்சார பிரவிருத்தியை யுண்டாக்குகிறது. ஜகத் அஸத்தியமாக தோற்றுதல் சம்சாரத்தினுடைய நிவிருத்தியைச் செய்கிறது.

## பாசுபதப்பிரம்மோபநிஷத்.

**59.** வித்தை அவித்தைகள் வியவகார திருஷ்டியினுலேயே அன்றி வேறில்ல. ஆத்மார்த்தமாய்ப் பார்த்தால் இல்லவேயில்ல. கேவலமான தத்துவம்தானிருக்கி றது. தனக்கு சுவயமாகவே எப்போது பிரம்ம சுவரூபம் விளங்குகிறதோ, அப்போது நிஜம்போல் விளங்கிக் கொண்டிருக்கிற துக்கம் முதலான இந்த பேதம் விளங்குகிற தில்ல. பரமாத்ம ஞானியானவன் ஜகத்தை ஜீவன் முதலான ரூபமாய்ப் பார்த்தா லும், அதை சித்ரூபமான பிரம்ம வஸ்து வென்று பார்க்கிறுனே யன்றி வேறேவித மாயல்ல. பிரம்மஞானியானவன் ஞானத்தினுலே சகலமும் பிரம்மசுவரூபமென்றே கிரகிக்கிறுன்.

## கடோபநிஷத்.

**60.** "பிரம்மம் நாஞக விருக்கிறேன்" என்று தெரிந்தால் தானே பிரம்மமாகிறுன். பிரம்மம் சகலத்திலும் பூர்ணமாயிருக்கிறது. வேறென்றுமில்ல. சத்ரூபமாயிருக்கி றதே பரப்பிரம்மம். அது காலதேச வஸ்துவாகிற மூன்று பரிச்சேதமு மற்றது. இந்த மனிதன் இந்தப் பிரம்மத்தினிடத்தில் எப்போது அற்பமாகிலும் பேதத்தை யறிகிறுனே அப்போதவனுக்குப் பயமுண்டாகிறது. இதில் சந்தேகமில்ல.

## தரிசனோபநிஷத்.

**61.** சகலமும் சத்தியமான பிரம்மமேயன்றி வேறொன்றல்ல வென்கிற புத்தி யெதுவோ அதுதான் மேலானதும் சத்தியமானதுமான பரப்பிரம்ம மென்று வேதாந்த ஞானத்தை கரைகண்டவர்களால் சொல்லப்பட்டிருக்கிறது.

**62.** ஓ! முனியே! பேதத்தை யுண்டு பண்ணுகிற அஞ்ஞானமானது ஞான பலத்தினாலே நஷ்டமானால் தனக்கும் பிரம்மத்திற்கும் இல்லாத பேதத்தை எவன் தான் உண்டு பண்ணிக் கொள்ளுவான்.

63. அத்வைத ஆத்மாவேயுள்ளது. பிரபஞ்சமுமில்லை. பிறப்பிறப்புமில்லை. ஆகாசமானது கடாகாசமென்றும் மடாகாசமென்றும் எப்படி சொல்லப்படுகிறதோ, அப்படி அஞ்ஞானிகளாலே ஆத்மா ஜீவனென்றும் ஈசுவரனென்றும் இரண்டு விதமாய்ச் சொல்லப்படுகிறான். நான் தேகமல்ல. பிராணனுமல்ல. இந்திரியங்களு மல்ல. மனது மல்ல. நான் எப்போதும் சாக்ஷி சுவரூபனாயிருக்கிறேன். ஆனதினாலே சிவனாகவேயிருக்கிறேனென்கிற புத்தி எதுவுண்டோ அது ஓ! முனிசிரேஷ்ட! சமாதி என்று சொல்லப்படுகிறது. அப்படிப்பட்ட **"நான்"** பிரம்மமேயன்றி ஸம்சாரியல்ல. என்னைக் காட்டிலும் வேறொன்றுமில்லை. ஸமுத்திரத்திலுண்டாகிற நுரை முதலியன மறுபடி சமுத்திரத்திலேயே எப்படி லயமடைகிறதோ, அப்படி ஜகத்தானது என்னிடத் திலேயே லயமடைகிறது. ஆகையால் ஜகத்தானது மனதை மனக் கற்பனையைத் தவிர வேறேயில்லை. மாயையுமில்லை.

## தாரஸாரோபநிஷத்.

**64.** ஓம். ஸ்ரீ பரமாத்மாவாகிய நாராயண னெவனோ அவன் பர சுவரூபியான பகவான். பரமபுருஷன். புராண புருஷோத்தமன். நித்திய சுத்த புத்த முக்த சத்திய பரமானந்தானந்த அத்துவய பரிபூரணன். அப்படிப்பட்ட பிரம்மமாகிற இராமனே "நானாகவிருக்கிறேன்."

## பஞ்சப்பிரம்மோபநிஷத்.

**65.** ஓ! கௌதமா! ஒரே மண் கட்டியினாலுண்டான மண்பாத்திரம் முதலான வைகள் மண்ணைக் காட்டிலும் அன்னியமல்ல வென்று எப்படி அறியப்படுகிறதோ, ஒரே தங்கத்திலிருந் துண்டான ஆபரணங்களெல்லாம் தங்கமய மென்று எப்படி அறியப்படுகிறதோ, இரும்பிலிருந்துண்டான நகம்வாங்கி முதலானவைகளெல்லாம் இரும்பைத் தவிர வேறல்லவென்று எப்படி யறியப்படுகிறதோ, அப்படி காரணத்தைக் காட்டிலும் வேறல்லாத காரியமானது காரணமேயல்லவா? அந்தக்காரண ரூபமாய் எப்போது மிருப்பது தான் சத்தியம். அதற்கு பேதமாய்ச் சொல்வது பொய்யே யாகிறது. அக்காரணம் ஒன்றே. காரியம் வேறல்ல. உபயாத்மகமு மல்ல. எவ்விடத் திலும் பேதமென்பது பொய்யே. ஏனென்றால், அதற்கு இன்ன தருமமென்று

விதிக்கப்படாததினுலேதான். அக்காரணமானது நித்தியமாயும் ஒன்றுயும் இரண்டாவ தற்றதாயு மிருக்கிறது. அக்காரணமானது இரண்டாவதில்லாத சுத்த சைதன்னியமே யல்லவா?

## கோபாலதாபினியுபநிஷத்.

**66.** கிருஷ்ண சுவரூபமாயும், நித்தியானந்த சுவரூபியாயுமிருக்கிற பரப்பிரம்மம் "நானே." அந்த ஓங்கார சுவரூபியான சத்தாகிற கோபாலன் "நானே." சிரேஷ்டமும் சத்தியமும் பாதிக்கப்படாததுமாகிய ஆத்மாவை "அவனே நான் " என்று கிரகித்து மனதுடன் ஐக்யம் செய்ய வேண்டியது. தன்ஜன கோபாலனென்றே பாவிக்க வேண்டியது.

## யாக்ஞவல்க்கியோபநிஷத்.

**67.** ஆத்ம ஞானியானபோது யாருக்கு நமஸ்காரம் செய்யவேண்டியது? அப்போது அவனுக்குக் கரும்த்தினுலாகவேண்டிய தென்னவிருக்கிறது? ஒன்றுமில்ஜல.

## வராகோபநிஷத்.

**68.** என்னுடைய பூர்ணுத்துமாவைத் தவிர ஜகத், ஜீவன், ஈசுவரன், மாயை முதலியவைகளில்ஜல. அவர்களுக்கு நான் விலக்ஷணன். தருமம் முதலிய லக்ஷண த்தை யுடையதாயும், அஞ்ஞானாந்தகார ரூபமாயுமிருக்கிற கருமமானது சுவப்பிரகா சமா யிருக்கிற ஆத்மாவான என்ஜனத் தொட யோக்கியமானதல்ல. சர்வ சாக்ஷி யாயும், வருணுசிரம மற்றதாயு மிருக்கிற ஆத்மாவை பிரம்ம சுவரூபமாகவே பார்க்கிறவன் பிரம்மமே யாகிறுன். விளங்கிக் கொண்டிருக்கிற பிரபஞ்சத்தைப் பிரகாசரூபமாயிருக்கிற பரமபதமாக வேதாந்தப் பிரமாணத்தினுல் பார்க்கிறவன் உடனே மோக்ஷமடைகிறான். சின்மாத்திரமாயும், எங்கும் பரவியதாயும், நித்திய மாயும், சம்பூர்ணமாயும், சுகரூபமாயும், நாசமற்றதாயுமிருக்கிறதுதான் உண்மை யான பிரஹ்மம். அதைத் தவிர வேறென்றுமில்ஜல யென்பது தான் பிரம்ம ஞானிக ளுடைய இருப்பு.

## ஹயக்கிரீவோபநிஷத்.

**69.** "பிரஞ்ஞானமே.பிரஹ்மம். நான் பிரம்மமா யிருக்கிறேன். "அது நீயாயிருக்கி றுய்." "இந்த ஆத்மா அந்தர்யாமியாயும் அமிருதனாயுமிருக்கிறுன்." "நானே பிரம்மமா யிருக்கிறேன்" என்கிற மகாவாக்கியங்களினுலே வெளிப்படுத்தப்பட்ட அர்த்தத்தை அந்த இந்த மந்திரங்கள் வெளியாக்குகின்றன.

## ஸரஸ்வதீரஹஸியோபநிஷத்.

**70.** என்னிடத்தில் ஜீவத்தன்மையும் ஈசுவரத் தன்மையும் கற்பிக்கப் பட்டிருக்கிறது. வாஸ்தவத்திலில்லை. இப்படி எவனறிகிறுனே அவன் முக்தனே. சந்தேகமில்லை.

## முக்திகோபநிஷத்.

**71.** ஓ! மாருதி! உள்ளேயிருக்கிற ஜோதியை (ஆத்மாவை) பிரயத்தினத்தினுல் தேடவேண்டியது. ஓ! கபிசார்த்தூலா! ஞானாஞ்ஞானங்களை விட்டு எவன் தானே பிரம்ம மென்றிருக்கிறுனே அவன் பிரம்மத்தை அறிந்தவன் மாத்திரமல்ல. அவன் பிரம்மமே.

**ஓம் தத் ஸத்**
**சுபம்.**

**ஜகத்குரு ஸ்ரீசங்கராசார்ய சுவாமிகளருளிய**
**ஸ்ரீவாக்கிய சுதை**
**என்னும்**

# திருக்கு திருசிய விவேகம்.

நாம் பார்க்கும் இப்பிரபஞ்ச வுருவம் கண்ணுல் காணப்படுவதால் திருசியம்; காணுங்கண் திருக்கு. அந்நேத்திரம் மனஸாலறியப் படுவதால் திருசியம்; மனம் திருக்கு. விருத்தியுடன் கூடிய அம்மனமும் சாக்ஷியாகிய ஆத்மாவாலறியப் படுவதால் திருசியம்; ஆத்மாவே திருக்கு. அது ஒன்றுலும் அறியப்படாத்தால் திருசியமே ஆகாது.

நீல பீதாதி வர்ணங்கள், ஸ்தூல சூக்ஷுமங்கள், நெட்டை குட்டைகள் முதலிய நானுவிதமான ரூபங்களையும் கண் ஏகமாயும்; நேத்திரத்தின் அந்த, மந்த, படுத்து வாதி நானு தர்மங்களை யங்ஙனமே.சுரோத்திராதிகளின் தர்மங்களை மனம் ஏகமாயும்; காமம், சங்கல்பம், சந்தேகம், சிரத்தை, அசிரத்தை, தைரியம், அதைரியம், லஜ்ஜை, பயம், நல்ல கெட்ட புத்தி முதலிய நானுவித மனோதர்மங்களை ஆத்மா ஏகமாயும் இருந்தறிகின்றது

இவ்வாத்மா உதிக்காது. ஒடுங்காது. பெருக்காது. சிறுக்காது. தன் பிரகாசத்தா லேயே ஸ்வயம் பிரகாசித்து சாதனுந்தரா பேக்ஷையின்றி அன்யத்தையும் பிரகாசிப் பிக்கின்றது.

**ஓம் தத்ஸத்**
**சுபம்.**

---

Printed by Thompson & Co., at the. “ Minerva” Press,
38, Popham's Broadway, Madras.

# ஹிந்துமத வேதாந்த புஸ்தகங்கள்.

**இந்துமத வேதாந்தப் பிரசங்கம்.**
அமெரிக்கா கண்டத்து சிகாகோ ஸர்வமத மஹா ஸபையில் இந்துமத ஜய முரசறைவதற்கென்றே ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகள் செய்த உபந்நியாசங்கள்.

**ஈசுவரானுக்கிரகத்தையும் பேராநந்தத்தையும் பெறுவதற்குரிய வழி.**
ஸ்ரீவிவேகாநந்த சுவாமிகளருளியது.

**மனிதனது உண்மை சுவருபம்.**
ஸ்ரீவிவேகாநந்த சுவாமிகளருளியது.

**ஸ்ரீ விவேகாநந்த சுவாமிகளுடைய சரித்திரமும் உபதேசங்களும்**
முதற்பாகம்

**ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸ தேவருடைய ஞானோபதேசங்கள் 250**

**ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸ தேவருடைய சரித்திரமும் உபதேசங்களும்**

**திருவண்ணாமலை மகாத்மியமும், திருவண்ணாமலை பிராஹ்மண சுவாமிகளென்கிற ஸ்ரீரமண மஹர்ஷிகளுடைய சரித்திர சங்கீரகமும்**

**திருவண்ணாமலை ஸ்ரீரமண மஹர்ஷிகளுடைய சரித்திர உபதேசங்கள் ஆங்கிலத்தில், (தெலுங்கில்)**

**திருவண்ணாமலை ஸ்ரீரமண மஹர்ஷிகள் ஸ்ரீ அருணாசலேசுவார் பேரில் அருளியுள்ள பாடல்களடங்கிய புஸ்தகம்.**

**விவேக சூடாமணி**
இது ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளது ஸமஸ்கிருத மூல கிரந்தத்திற்கு திருவண்ணாமலை ஸ்ரீரமண மஹர்ஷிகள் செய்த தமிழ் வசனம். அத்தாமலகம் திருக்குதிருசிய விவேகம் குருதுதிகளுடன்

ஒவ்வோர் புஸ்தகத்திலும் அந்தந்த மஹாத்மாக்களின் திருவுருவப் படங்கள் ஒவ்வொன்றுண்டு

**சிறுவர்களுக்குரிய சிறு கதைகள் 50**

**S. நாராயண ரெட்டி,**
ரெட்டைப் பிள்ளையார் கோவில் தெரு, திருவண்ணாமலை.